திருவிரிஞ்சிபுரம் அருள்மிகு
மார்க்கபந்தீஸ்வரர் கோவில்



விலை
ரூபாய் 5/-

# ஸ்தல புராணம்

வரலாற்றுத் தொகுப்பு விசேடங்களும்

திருவிரிஞ்சைத் திருப்பதிகங்கள்
உள்ளடங்கியது.

திருமதி & திரு நாகராஜய்யர் அவர்கள்

நன்கொடை 5,000 புத்தகங்கள்

5ம் பதிப்பு.



பெங்களூர் நெடுஞ்சாலையில் செதுவாலை பிரிவுச் சாலையில்

கட்டப்பட இருக்கும் அலங்கார வளைவு மண்டபம்.

உ

சிவமயம்

# திருவிரிஞ்சிபுரம்
# அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரர் கோவில்

(அருள்மிகு வழித்துணை நாதர்)

# ஸ்தல வரலாற்றுத் தொகுப்பு
# விசேடங்கள்
# திருவிரிஞ்சைத் திருப்பதிகங்கள்

ஐந்தாம் பதிப்பு 1991

உ

ஸ்ரீ சந்தர மௌளீச்வராய நம:



ஸ்ரீ சங்கரபகவத் பாதாசார்ய பரம்பரை
ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு
ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

ஸ்ரீ மடஸம்ஸ்தானம்
காஞ்சிபுரம் 631502

பெரியவர் ஆசியுரை

புராணம், ஸ்தல வரலாறு என்பது க்ஷேத்ரம், மூர்த்தி, தீர்த்தம் இவைகளின் சரித்திர வரலாறு, இவைகளில் யார், யார் அந்த ஸ்தலத்தில் விளங்கும் கடவுளை எந்த எந்த விதத்தில் வழிபட்டு எப்பேர்பட்ட பயனை அடைந்தார்கள் என்பதை நமக்கு போதிக்கின்றது. மேலும் சைவ சமயாசாரியார்கள் மனமுருக பாடி வழிபட்டு இறைவனை நேரில் கண்ணெதிரே கண்ட வரலாறுகளையும் நமக்கு எடுத்துரைப்பது. ஆகவே இவைகள் உண்மையாகவே நடந்த நிகழ்ச்சிகள். இப்பேர்பட்ட நிகழ்ச்சிகளைக் கொண்ட ஸ்தலங்கள் நம் நாட்டில் பல இருக்கின்றன.

அப்பேர்பட்ட மஹிமை வாய்ந்த ஸ்தலங்களில் ஒன்று விரிஞ்சிபுரம் மரகதாம்பிகை சமேத மார்கபந்து ஈஸ்வரர் அல்லது வழித்துதுணை நாதர்.

சிவநேசச் செல்வர்களும் மற்ற அன்பர்களும் இந்த (வழித்துணை நாதரின்) ஸ்ரீ மார்கபந்து ஈஸ்வரரின் மஹிமையை அறிந்து கொண்டு மேற்படி கோவிலின் திருப்பணிக்கு தாராளமாக உதவி செய்து அவனருளால் எல்லாவித மங்களங்களையும் அடையும்படி ஆசீர்வதிக்கிறன்.

நாராயணஸ்ம்ருதி

சுகவனேஸ்வர், ஐ.ஏ.எஸ்.
COMMISSIONER
HINDU RELIGIOUS AND CHARITABLE
ENDOWMENTS ADMINISTRTION DEPARTMENT
MADRAS - 600 034

# அணிந்துரை

திருத்தலங்கள் தோறும் எழுந்தருளியுள்ள இறைவனை வழிபடுவதன வாயிலாக மாந்தர் தாமும் தெய்வ நிலைக்கு உயரலாம் என்று திருமூலர் நமக்கு அறிவுறுத்துகின்றார்.

"நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வானே"

என்பது திருமந்திரம்.

நாடு, நகரமாக தேடித்திரிந்து திருக்கோயில்களுக்குச் செல்லும்போது, தலப்பெருமைகளை நமக்குக் காலக்கிரமப்படி எடுத்துரைத்து திருக்கோயில வழிபாட்டிற்கு நம்மை ஆற்றுப்படுத்துவனவே தலபுராண நூல்கள் ஆகும். "இன்னின்னார் வழிபட்டு இன்னின்ன பயன் பெற்றார். அதுபோல நீரும் வழிபட்டால் இன்னின்ன மேலான பலன்களைப் பெற்றுய்யலாம் எனத் தலவரலாறு நூல்கள் நம்மை இறைவழிபாட்டிற்கு ஆற்றுப் படுத்துகின்றன.

தீயவற்றைக் கனவிலும் சிந்தியாத தூயவர்கள் வாழக் கூடிய தொண்டை நன்னாட்டில், அண்டரும் வணங்கி வாழ்த்த அருள்மிகு அன்னை மரகதாம்பிகை சமேதராக மார்க்கபந்தீஸ்வரர் எழுந்தருளி திருவருள்பாலிக்கும் திருத்தலம்தான் திரிவிரிஞ்சிபுரம் திருத்தலமாகும். வாழ்க்கை எனும் பயணத்திற்கு உறுதுணையாய் இருக்கும் சிவபெருமான், இங்கு இப்பெயர் கொண்டிருப்பது பொருத்தமே. புண்ணிய பாரதத்தில சிறந்து விளங்கும் ஆயிரத்தெட்டு சிவதலங்களில், விசேடங்கள் யாவும் பெற்று விளங்கும் சிறந்த விசேட தலம் இத்திருத்தலம் என்பதை உணர்த்தும் வகையில ஒரே மகாலிங்கத்தில் 1008 சிவலிங்கம் இத்திருத்தலத்தில் அமைந்து விளங்குவது கொண்டு நாம் உணர்ந்திடலாம்.

திருவண்ணாமலையில், சோதியாய் தோன்றிய சிவபெருமானின் திருமுடி காணப்பெறாத பிரம்மா, மானிடப் பிறவி எடுத்து அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரரின் திருமுடி கண்டு, பிரமனாகக் காணாத முடியை வளைத்து அருளிய பெருமைக்குரிய தலமாகும். ஆதிசைவர் குலத்தில் சிவசர்மன் எனும் பாலகனாக தோன்றிய பிரம்மா இத்திருத்தலத்தில் சிவபெருமானிடம் உபநயனம், பிரம்மோபதேசம், சிவதீட்சை பெற்ற வரலாறுகள் இத்தலபுராணத்தில் மிகச் சிறப்பாக விவரிக்கப்பட்டுள்ளன.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருவையாற்றில் கயிலைக் காட்சி கண்டு இன்புற்றதைப் போல சர்வ சாஸ்திர விற்பன்னர் சாவித்திரன் என்பவர் இத்திருத்தலத்தில் கயிலைக் காட்சி கண்டு இன்புற்றுள்ளார். தனபாலன

என்கிற வணிகனுக்கு, வேடுவராய் சிவபெருமான் வழித்துணை வந்தருளிய காரணம் பற்றியே இத்திருத்தலத்து இறைவர் அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரர (வழித்துணை நாதர்) எனும் திருநாமம் பெற்று விளங்குகிறார். வணிகன் தனபாலனின் மிளகுப் பொதிகளைப் பயற்றுப்பொதிகளாக இறைவர் மாற்றி புரிந்த திருவிளையாடல், மாணிக்க வாசகருக்காக நரியைப் பரியாக்கி, பரியைப் பின் நரியாக்கிய இறைவனார் திருவிளையாடலோடு ஒப்பிட்டு இன்புறத்தக்கதாய் அமைந்து விளங்குகின்றது.

ஸ்ரீ ஆதி சங்கராச்சாரிய ஸ்வாமிகளால் பீஜாக்ஷப் பிரதிஷ்டை செய்யப்பட்ட க்ஷேத்திரமாகவும், தேவார வைப்புத் தலமாகவும், அருணகிரிநாதர், அப்பைய தீட்சிதர் போன்ற ஆன்றோர்களின் பாடல் பெற்ற தலமாகவும் விளங்கும் இத்திருத்தலத்தின் அருமை பெருமைகள் யாவும் இத்தல புராண நூலில் மிகச் சிறப்புற நன்கு எடுத்து விளக்கப்பட்டுள்ளன.

சிற்பக்கலைச் சிறப்பிற்குச் சான்றாக இலங்கும் இத்திருத்தலத்தில் உள்ள சிம்மதீர்த்தம், சந்தானப்பேறு நல்கும் அற்புத தீர்த்தமாக இன்றும விளங்குவது குறிப்பிடத்தக்கது. 'திரிவிரிஞ்சை மதிலழகு' என வழங்குகிறது. சிம்ம தீர்த்தம், பிரம்ம தீர்த்தங்களில் நீராடி அருள்மிகு மரகதாம்பிகை சமேத அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரரை வழிபட்டால், தீவினைகள் யாவும் தீர்ந்து பிறவிப்பிணியும் நீங்கும் என்று அருளாளர்கள் இத்திருத்தலத்தின் சிறப்பைப போற்றியுள்ளார்கள்.

"பயோநதி தீர நிவாஸ லிங்கம்

பாலார்க்ககோடிப் ப்ரதிமம் த்ரிநேத்ரம்

பத்மாஸநேநார்ச்சித திவ்ய லிங்கம்

வந்தாமஹே மார்க்கஸஹாய லிங்கம்"

என்று ஸ்ரீ அப்பைய தீட்சிதர் போற்றியுள்ள மகிமை வாய்ந்த இத்திருத்தலத்தை இறையன்பர்கள் எல்லோரும் வணங்கி வழிபட்டு பிறவி பெற்ற பேரின்பத்தைப் பெற வேண்டும் என வேண்டுகிறேன். "மார்க்கேஷீ மாம் ரக்ஷது நீலகண்ட" என்று சிவகவசமந்திரமும், "பந்தானம் ஸுபதாரக்ஷேத், மார்கம் க்ஷேமகர்த்தா" என்று தேவீகவச மந்திரமும் உரைக்கின்றன.

"யே பதாம் பதிரக்ஷய

ஜலப்ருதாய வ்யுத."

என ஸ்ரீருத்ரம் முழங்குகிறது.

"ஷோடசார்ணஸ்வரூபாம் தாம் பதிக்ஷத்ருத்ரஸம்ஸ்ருதாம்

வந்தே வ்ருக்ஷஸ்திதாம் வித்யாம் மார்கே சங்கடஹாரிணீம்"

என அம்பிகையின் சுலோகமும் மந்திரமும் உள்ளன. ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் அருளிய மார்க்கபந்து ஸ்தோத்ரமும், மார்க்கஸஹாய லிங்க ஸ்துதியும மேற்கூறிய மந்திரங்களின் சக்திக்கு ஒப்பானவை. இத்தல வரலாற்று நூலைச சிறப்புற எழுதியுள்ள நூலாசிரியருக்கும், சிறப்புற வெளியிடும் திருக்கோயில் நிர்வாகிகளுக்கும் என் நல்வாழ்த்துக் களைத் தெரிவிக்கிறேன்.

அன்புடன்

**சுகவனேஸ்வர்.**

**V. கிருஷ்ணசாமி,** எம்.ஏ.,
துணை ஆணையர்,
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

சேலம்
1—12—91

# அணிந்துரை

பன்னாட்டவரும் போற்றி வியந்திடும் விண்முட்டும் விமானங்களும், வானுயர்ந்த கோபுரங்களும், கல்லிலும் அம்பொன்னிலும் கலைவண்ணங்களையும், சிற்பங்களையும் திருக்கோயில்களில் நம்நாட்டு கலைஞர்கள் பல நூற்றாண்டு களுக்கு முன்பே படைத்து நமது கலாச்சார பெருமையினை காலத்தால் அழியாச் செல்வங்களாக்கி சென்றுள்ளனர். தமிழக திருக்கோயில்களின் பெருமையையும், வரலாற்றையும் புராண இதிகாசங்களையும், இன்னபிற விவரங்களையும் அனைவரும் அறிந்து மகிழ்ந்திட நமது தமிழக அரசும், அறநிலையத் துறையும் ஒவ்வொரு திருக்கோயிலும் தலவரலாறு வெளியிட வேண்டுமென அறிவுறுத்தியதற்கேற்ப விரிஞ்சிபுரம் திருக் கோயில் தலவரலாற்றினை இப்போது வெளியிட செயல் அலுவலர் திரு. **சு. சாம்பசிவன்** அவர்கள் மேற்கொண்ட முயற்சியினையும், இப்புத்தகத்தை நன்கொடையாக அச்சிட்டு வெளியிட உதவி புரிந்துள்ள தலைவர் திரு. எம். **நாகராஜன்** அவர்களையும் பாராட்டுகின்றேன்.

மெய்யன்பர்களும், மாணவர்களும், ஆசிரியப் பெரு மக்களும் இப்புத்தகத்தை வாங்கி படித்து பயனுறுவார்கள் என நம்புகிறேன்.

அன்பன்,

V. கிருஷ்ணசாமி.

உ

முருகன் துணை

**வே. சொரிமுத்து,** பி.ஏ., பி.எல்;
துணை ஆணையர்,
இ. அ. ஆ. துறை,
வேலூர்.

# அணிந்துரை

தொண்டை நாட்டின் கண் அமையப்பெற்ற பழம்பெருமையும், தொன்மையுமிக்க சிவத்தலங்கள் பலவற்றுள் இத் திருவிரிஞ்ஞித் தலமும் ஒன்றாகும். இத் திருக்கோயிலானது "விரிஞ்சிபுரம் மதியழகு" எனச் சிறப்புப் பெற்று, ஐம்பெரும் பிரகாரங்களும், எழுநிலைக் கோபுரங்களையும் கொண்டு விளங்குகிறது. இங்கு அமையப்பெற்றுள்ள மண்டபங்களில் உள்ள சிற்பங்கள் மிக்க கலை நயத்துடன் அழகுற அமையப் பெற்றுள்ளது. இத்தலம் மூர்த்தி தீர்த்தம், தலம் ஆகிய முப்பெரும் சிறப்புடையது.

இத்தலத்திலுறையும் இறைவன் அடியவருக்கு வழித்துணையாய்ச் சென்றதால் வழித்துணைநாதர் (அல்லது) மார்க்கபந்தீசுவரர் எனப் பெயர் பெற்றுள்ளார். இத்தலம் 'விரிஞ்சிபுரம்' 'பிரம்மபுரம்', 'விக்ஷ்ணுபுரம்' மற்றும் 'கௌரிபுரம்' என்றும் பெயர் பெற்றுள்ளது. இது பற்றிய புராண வரலாறுகள் இத் தலபுராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இந்நூலை வெளியிட ஆலய நிர்வாகத்தினர் எடுத்துக்கொண்ட முயற்சிகளைப் பெரிதும் பாராட்டி, இறையன்பர்கள் இந்நூலினைப் பெற்று பயனடைய எல்லாம் வல்ல எம்பெருமானை இறைஞ்சி வேண்டுகிறேன்.

இவண்,

**வே. சொரிமுத்து**

# அணிந்துரை

ஒரு சித்திரமாக, நம் மனக் கண்ணில் தெரிகிறது இவ்வுலகம். அதுவே, அறிவுக் கண்ணுக்கு பல விசித்திரங்களாகத் தெரிகிறது. மனிதனை ஒருவன் என்று நினைக்கிறோம். ஆனால் பலவித விசித்திர மனிதர்களைக் காண்கிறோம். இப்படியே மரம், செடி, கொடி, விலங்குகள், பறவைகள் போன்ற உயிரினங்களும் விதம் விதமாக விரிந்து காட்சி அளிக்கின்றன.

இதனைக் கொண்டு நாம் அறிவது, ஏகம் என்றிருப்பது அனேகம் என விரிந்து செல்கின்றது, மறுபடியும் ஏகமாகவே ஆகும் என்பது தான்.

இக் கருத்தைக் கொண்டே, நம் இந்து மதம், ஏகமாகிய இறைவனை, அனேகமான பல இறைவடிவங்களில், பல பெயர்களில், பலப்பல இறைவன் உறைவிடங்களான திருக்கோயில்களில் வழிபட வழி வகுத்துள்ளது.

எனவே இறைவன் உறைவிடங்களான ஒவ்வொரு திருக்கோயில் ஏற்பட்ட முறை, உள் உறையும் திருமேனி அருளக் கூடிய சிறந்த கருணைத் திறன், போன்ற விவரங்கள் தெரிந்து கொள்வது, வழிபடுவோரின் உயரிய கடமை மட்டுமின்றி, அருள் வழியில் தம்மை ஒருமுனைப்படுத்தத் தேவைப்படுவதாகும்.

இதற்கு இந்நூல் ஒருவழித்துணைவன் எனக் கருதுகிறேன். இதனை வழங்க அருளாண்மை ஏற்றவர்கள், தாளாண்மை ஏற்றவர்கள், எல்லோரும், இறையருள் மற்றும் இனிய வாழ்வினைப பெற, இறையினை இறைஞ்சுகிறேன்.

அன்புடைய

**மீ. பரமேஸ்வரன், எம்.ஏ.,**
ம.த.அ. சேலம்,
இந்து சமய அறநிலையத் துறை.

# முன்னுரை

**கே. வாசுதேவன்**
*உதவி ஆணையர் / தக்கார்*

*அ/மி மார்க்கபந்தீஸ்வர ஸ்வாமி
திருக்கோயில் – விரிஞ்சிபுரம்
வேலூர் வட்டம் –
வ.ஆ. அம்பேத்கார் மாவட்டம்.*

விரிஞ்சிபுரம் அருள்மிகு மார்க்கபந்தீஸ்வர ஸ்வாமி திருக்கோயில் வட ஆற்காடு அம்பேத்கார் மாவட்டத்திலேயே வேலூருக்கு அருகாமையில் அமைந்துள்ள ஒரு பிரபலமான பிரார்த்தனை ஸ்தலமாக பிரசித்தி பெற்று விளங்கி வருகிறது.

மேற்படி திருக்கோயிலானது "விரிஞ்சிபுரம் மதிலழகு" என்ற சொற்படி அழகிய ஐந்து பெரிய பிரகாரங்களையும் நாற்புறமும் பெரிய திருமதில்களையும் கம்பீரமான ஏழுநிலை ராஜ கோபுரங்களையும் தன்னகத்தே அமையப் பெற்றதும் மிகவும் பொலிவுடன் திகழ்ந்து வருகிறது. இத் திருக்கோயில் மூன்றாம் பிரகாரத்தில் அமைந்துள்ள மண்டபங்கள் மிகவும் சிறப்பான கலையம்சமும் அழகிய சிற்ப வேலைப்பாடுகளும் கொண்டவையாகத் திகழ்ந்து வருகிறது.

திருவண்ணாமலையில் அடிமுடி காண முடியாதவர்களில் ஒருவரான ஸ்ரீ பிரம்ம தேவர் ஆதி சைவர் குலத்தில் சிவசர்மனாக அவதரித்து இத்தலத்தில் இறைவனைப் பூசித்து திருமுடி கண்டதில் விரிஞ்சிபுரம் எனவும் பிரம்மா அவதார வழி அறிந்து சிருஷ்டி தந்திரம் அறிந்து உலகியற்றியதால் பிரம்மபுரம் எனவும் திருமால் சிவபிரானை இடது சக்ராயுதம் பெற ஆயிரம் தாமரை மலர்களால் வழிபாடு கொள்வதால் விஷ்ணுபுரம் எனவும், கரன் என்னும் யக்ஷன் பூசித்து சாபவிமோசனம் பெற்றதால் கரபுரம் எனவும், சும்பன் நிசும்பன் என்ற இரு அரக்கர்களையும் கொன்ற பாவம் நீங்க இறைவி பாலாற்றில் நீராடி வழிபட்டதால் கௌரிபுரம் எனவும், இறைவன் வணிகர்களுக்கு வழித்துணை நாதராக இருந்து வந்ததால் மார்க்கபந்தீஸ்வரம் எனவும் இத்தலத்திற்கு பல திருப்பெயர்கள் உள்ளன. இத்தலம் மூர்த்தி, தீர்த்தம் தலம் ஆகிய முப்பெருஞ் சிறப்புகளை உடையது.

ஆதி சைவ குடும்பத்தில் சிவசர்மனாகப் பிறந்த பாலகன் இறைவனால் ஆட் கொள்ளப்பட்டு சகல கலைகளையும் ஓதாது உணர்ந்து ஆண்டவனை முப்போதும் தொட்டு வழிபட தகுதி பெற்றதொரு பாலகன் என்ற காரணத்தினால் தானே முடி சாய்த்து கொடுத்து அவன் செய்த வழிபாட்டை ஏற்றுக் கொண்ட நாள்தான் கார்த்திகை கடை ஞாயிறு நாள். ஆகவே பன்நெடுங்காலமாக ஒவ்வொரு கார்த்திகை திங்கள் கடைசி ஞாயிறு குழந்தை வரம்

வேண்டி ஸ்ரீ ஆதி சங்கரரால் சக்கரஸ்தாபிதம் செய்யப்பட்ட சிம்ம தீர்த்தத்தில் பெண்கள் பல்லாயிரக்கணக்கில் குளித்து ஈர உடையுடன திருக்கோயில் உள்ளேயும் சன்னதி முன்புறமுள்ள மண்டபத்திலும், பிரகாரத்திலும் படுத்துத் தூங்கி கனவு கண்டு அடுத்த ஆண்டில் குழந்தைகளைப் பெற்று மகிழ்வதும் இத் திருக்கோயிலின் சிறப்புக்கு ஓர் எடுத்துக் காட்டு.

வரலாற்றுச் சிறப்பு மிக்கதும் பழம் பெருமை வாய்ந்ததுமான திருவிரிஞ்சிபுரம் அருள்மிகு மார்க்கபந்தீஸ்வரர் திருக்கோயில் தல வரலாறு வெளியீட்டுத் திருப்பணியினை மேற்கொண்டு பக்தர் பெருமக்களுக்கு புத்தக வடிவில் அச்சிட்டுக் கொடுத்த திருக்கோயில் செயல் அலுவலர் திரு- சாம்பசிவம் அவர்களுக்கும் தல வரலாறு அச்சிட்டு கொடுத்த நன்கொடையாளர் திருமதி & திரு நாகராஜன அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொண்டு அன்னை அன்பு மிகு மரகதாம்பிகை உடனுறை அருள்மிகு வழித்துணை நாதரின் திருவருளால் எல்லோரும் பல நலன்களும் பெற்று பல்லாண்டுகள் வாழ யானும் எல்லாம் வல்ல எம்பெருமானைப் பணிந்து வேண்டுகிறேன்.

**கே. வாசுதேவன்**
தக்கார் / உதவி ஆணையர்



பஞ்சமுக விநாயகர்
வெளிப்பிரகார மண்டபத்தில் உள்ளது.

உ

முருகா



அருள்மொழியரசு திருமுருக

## கிருபானந்தவாரியார் ஸ்வாமிகள் அருளிய பாடல்

ஆர்க்கும் அருள்செய் அநாதியிறை
அமரர்க் கிறைவன் அருவினைகள்
தீர்க்குந் தேவன் திரிசூலி
திகைத்து வாடும் அடியரைக்கண்
பார்க்கும் பரமன் மறைபோற்றும்
பரமா னந்தன் திருவிரிஞ்சை
மார்க்கபந்து மலர்ப்பதத்தை
மறவார் மீண்டும் பிறவாரே

தொண்டை நன்னாட்டில் அண்டமும் புகழும் அரிய திருத்தலம் திருவிரிஞ்சைத்தலம். இறைவன் வழித்துணை நாதர். இவரை வழிபட்டார்க்கு முத்தியும்சித்தியும் உண்டாகும். திருவிரிஞ்சைத்தல் புராணம் என்ற நூலை ஆலய நிர்வாகத்தார் அச்சிட்டு வெளியிடுகின்றனர். இந்த நூல் இனிமையாக அமைந்துள்ளது. இதனை எல்லாரும் ஓதி உய்வார்களாக. வாழ்க, வளர்க, சூழ்க.

அன்பன்

**கிருபானந்தவாரி**

ஓம்

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு மரகதாம்பிகை உடனமர் மார்க்கபந்தீஸ்வரர் திருக்கோயில் திரிவிரிஞ்சிபுரம்

இந்த சிவஸ்தலம் மிக்க பெருமை வாய்ந்ததும் புராதனமாக ஸ்ரீ ராஜராஜாக்களாலும் வழிபடப்பட்டும் பிரம்மபுத்திர சிவசர்மன் எனும் பாலகனுக்கு அருள் புரிந்து திருமுடி வளைத்த பெருமானாகிய ஸ்ர்வலோக நாயகனாக விளங்கும் சிறப்பு வாய்ந்ததொன்றாகும். இவ்வாலயத்தின் திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா அட்சய ஆண்டு மாசித் திங்கள் 27- ஆம் நாள் புதன் கிழமை (11.3.1987) அன்று திருப்பணிக் குழுவினரின் பெருமுயற்சியாலும் ஈச்வர கிருபையாலும் இனிது நிறைவேறியது.

தற்போது ஆலய வெளிப்பிரகாரத்தின் தளவரிசை கற்கள் சீரமைக்க வேண்டியுள்ளது. மேலும் மேற்கு ராஜகோபுரமும் பழுது பார்த்து முழுமையாக கட்டப்பட வேண்டியுள்ளது. ஆலயதிருக்குள் திருப்பணியும் நடைபெற வேண்டியுள்ளது. இவ்வாலயத்தில் எழுந்தருளியுள்ள சுவாமி, பக்தர்களின் வாழ்க்கை, பயணமிரண்டிற்கும் வழிகாட்டியாக இருந்து அருள்புரிவதால் 'வழித்துணை நாதர்' என்றும் அழைக்கப்பட்டு வருகிறார். பெங்களூர் நெடுஞ்சாலையில் செதுவாலை – விரிஞ்சிபுரம் பிரிவுப்பாதையில் ஆலயத்திற்கு வரும் பக்தர்களுக்கு வழிகாட்டும் பொருட்டு ஒரு 'அலங்கார வளைவு' அமைக்க திட்டமிடப்பட்டுள்ளது. இவ்வாலய "நித்தியப்படி அறக்கட்டளைக்கு" ரூ. (1000/- (ரூபாய் ஓராயிரம் மட்டும்) செலுத்தி தங்களுக்கு விருப்பமான நாளில் ஆண்டுதோறும் அபிஷேகம், அர்ச்சனை செய்து அருட்பிரசாதத்தினையும் வழித் துணைநாதரின் நல்லாசிகளையும் பெறுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

மேற்கூறிய திருப்பணிகள் அனைத்தும் செவ்வனே நிறைவேற இந்த ஸ்தல புராணத்தினைப் படிப்பதன் மூலம் பக்தகோடி பெரு மக்கள் தங்களால் இயன்ற அளவில் பொருள், நிதியுதவியினை பெருமளவில் அளித்திட வேண்டும் என்று அன்புடன் கேட்டுக்

கொள்கிறேன்

இப்புராணத்தை சீரிய முறையில் தொகுத்தளிக்க பேருதவி புரிந்த அனைவர்க்கும், நன்கொடையாக அச்சிட்டு உதவிய திருமதி உத்ரா நாகராஜன் மற்றும் திரு. நாகராஜன் அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றியினை ஆலயத்தின் சார்பாக தெரிவித்துக் கொள்கிறேன்.

நாள் : 14.12.91. எஸ். சாம்பசிவன், எம்.ஏ.,

திருவிரிஞ்சிபுரம். நிர்வாக அதிகாரி.



ஸ்தல விருட்சம்

பனைமரம்

உ

முருகா

# விநாயகப் பெருமான் வணக்கம்

வானுலகும் மண்ணுலகும் வாழுமறை வாழப்

பான்மைதர செய்யதமிழ்ப் பார்மிசை விளங்க

ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்

ஆனைமுக னைப்பரவி அஞ்சலிசெய்கிற்பாம்.

உலகிலே உயர்ந்து விளங்கும் மொழிகள் பதினெட்டு. மொழிகள் பதினெட்டிலும் மேன்மைதரும் மொழி தமிழ். தமிழ் மொழி தாய் போன்று முன்னணியில் விளங்கும் தன்மையும், மென்மையும், பான்மையும் மிக்கது. இதனால்தான் அருணகிரிநாத சுவாமிகள் "முந்து தமிழ் மாலைக்கோடி கோடி" என்று எல்லா மொழிகட்கும் தமிழ் முந்து நிலையில் உள்ளது என்று பாடியுள்ளார். மேலும் தமிழ், தெய்வ மொழியாகும் தகுதியுடையதினால்தான் மகாகணபதி பெருமான் முத்தமிழடைவினை முற்படுகிரிதனில் முற்பட எழுதிய முதல்வோனாக விளங்குகின்றார். இந்த உலக மொழிகளில் அழகிய எளிய இனிய பான்மை தருகின்ற தமிழ், உலகில் சிறந்து விளங்க எழுதி அருள் பாலித்தார். கருணையில் கடல் போன்று விளங்கும் கணேசப் பெருமான், விண்ணுலகும், மண்ணுலகும், வேதங்களும், மெய்ஞ் ஞானமும் மேலாக வாழ்ந்திட, ஆனைமுகம் கொண்டு எழுந்தருளி அருள்பாலித்துள்ளார். எனவே இப் பெருமானைப் போற்றி பணிந்து இன்புற்றிடுவோமாக. ஏனெனில் எடுத்த நல்ல காரியங்கள் இனிது வாழச் செய்தருளும் இன்னருள் மூர்த்தியாவார் ஆனைமுக அண்ணலார். திருவிரிஞ்சைத் தலமும் இனிது வாழத் திருவருள் பாலிப்பார்.

அன்பன்,

**மு. பெருமாள்**

வேலூர் சண்முகனடியார் சங்கம்

உ
முருகா

## திரு விரிஞ்சை முருகப் பெருமான் துதி

உலகேழும் வலம்வந்த உன்பாதம் எங்ஙனம்
என்னுளக் குகை தோய்ந்ததோ!
பலநாளும் பலகுன்றில் கால்வைத்துப் பழகியே
என் மனம் கால்வைத்தியோ!
மலமாசு பலதங்கும் மலைமனதில் தங்குதல்
மாபெருங் கருணையலவோ!
நலமார்வி ரிஞ்சையில் நானுய்ய மேவிய
நாயகா வடிவேலனே!

## நால்வர் துதி

பாலைக் கொடுத்தாண்ட மெய்ஞ்ஞான சம்பந்தப்
பிள்ளையைப் போற்றுமனமே!
சூலை கொடுத்தாண்ட சொற்கோவ ரப்பரவர்
சீரடியைப் போற்றுமனமே!
ஓலை கொடுத்தாண்ட ஆரூரன் அடியிணையை
எந்நாளும் போற்றுமனமே!
காலைக் கொடுத்தாண்ட எந்தைமணி வாசகரின்
காலிணையைப் போற்றுமனமே!

செந்தமிழ்ச் செல்வன்
மு.பெ. சத்தியவேல் முருகன் B.E.

1. ஓர் வளரும் ஒரு மகவு நீராட்டக்
குழைந்தருளும் இனியவாய்மைச்
சீர்வளரும் திருவிரிஞ்சைச் சிவபெருமான்
திருப்பாகம் சேர்ந்து நாளும்
பார்வளரும் மரகதாம்பாள்பாதம் புகழ்ந்
தேத்திப்பணிய வல்லார்
பேர்வளரும், புகழ் செல்வம் பெருவாழ்வு
நிறைஞானம் பெற்று வாழ்வார்

2. ஒரு மகவு புனலாட்ட உன்னுகின்ற
பொழுது குழைந்துருகிச் சாய்ந்த
திருவடிவு கொண்டவரைச் சீவர்களின்
வழித்துணைச் சிவமாம் ஒன்றைத்
தருவென கொண்டோங்கு மரகதக்
கொடியை விரிஞ்சைநகர் சார்ந்த வாழ்வைத்
திருமகளுங் கலைமகளும் வணங்கவருள்
மலை மகளைச் சிந்தைசெய்வோம்!

**மா.க. காமாட்சி நாதன்**
சென்னை

## திரு விரிஞ்சிபுர க்ஷேத்திரத்தில் நடக்கும்

# விசேஷ உற்சவங்கள்

சித்திரை மாதம் – சித்திரா பௌர்ணமியில் வசந்த விழா.

வைகாசி மாதம் – விசாக உற்சவம் உபய தாரர் வேண்டப்படுகிறது.

ஆனி மாதம் – உத்திரத்தில் ஸ்ரீ நடராஜர் ஆனித் திரு மஞ்சன அபிஷேகம்

ஆடி மாதம் – ஆடிப்பூரவிழா (பத்து நாட்கள்) தேரோட்டத்துடன்

ஆவணி மாதம் – ஸ்ரீ விநாயகர் சதுர்த்தி
ஸ்ரீ கோகுலாட்டமி கிருஷ்ண ஜயந்தி

புரட்டாசி மாதம் – நவராத்திரி கொலு;
விஜயதசமி
பாரிவேட்டை

ஐப்பசி மாதம் – பௌர்ணமியில் அன்னா பிஷேகம்

| | |
|---|---|
| கார்த்திகை மாதம் | – திருக் கார்த்திகை கடை ஞாயிறு பெருவிழா. |
| வெள்ளி | – 108 சங்காபிஷேகம் |
| சனி | – ரிஷபமூர்த்தி ஈசன் கனவிடைதந்த காட்சி மாலை தெப்பல் உற்சவம் 1–நாள். |
| ஞாயிறு | – காலை 6.30 மணிக்கு பிரம்ம குளத்தில் தீர்த்தவாரி.<br>காலை 7 மணிக்கு மேல் பாலக பிரம்மாவான சிவசர்மனுக்கு உபநாயன சிவதீட்சையும், 9 மணிக்கு மேல் திருமாட வீதி உலாவும் 12 மணிக்கு மேல் அபிஷேகம்.<br>மாலை அபிஷேகம் மகா தீபாராதனைகள், இரவு பஞ்ச மூர்த்திகள் இடபமூர்ந்து மகாமேரு உற்சவம். |
| திங்கள் | – காலை 8 மணிக்கு அபிஷேகமும், 10 மணிக்கு திருமாட வீதி ருத்ராட்ச விமான உற்சவம்.<br>காலை 11 மணிக்கு மேல் உச்சிகால அபிஷேகம். மாலை 3 மணிக்கு அபிஷேகம்.<br>இரவு பஞ்சமூர்த்திகள் ரிஷபவாகன உற்சவம். |
| மார்கழி மாதம் | – மாணிக்கவாசகர் உற்சவம திருவாதிரை உற்சவம். |
| தை மாதம் | – புனர்வசு நாள் தென் கைலாயகிரி பிரதட்சனையும் பாரிவேட்டையும். |

| | | | |
|---|---|---|---|
| பங்குனி மாதம் | – | பிரம்மோற்சவம் (பத்து நாட்கள்) தேரோட்டத்துடன். | |
| | | பகல் | இரவு |
| முதல் நாள் | – | துவஜா ரோஹணம் | ரிஷப வாகனம் |
| 2–ம் நாள் | – | பல்லக்கு | காமதேனு அதிகார நந்தி வாகனம் |
| 3–ம் நாள் | – | மேற்படி | திருக்கல்யாணம் ரிஷப வாகனம் |
| 4–ம் நாள் | – | பல்லக்கு | திருக்கல்யாணம் ரிஷப வாகனம் |
| 5–ம் நாள் | – | மேற்படி | திருக்கல்யாணம் அன்னவாகனம் |
| 6–ம் நாள் | – | மேற்படி | யானை வாகனம் |
| 7–ம் நாள் | – | இரதோற்சவம் | |
| 8–ம் நாள் | – | காலை : பல்லக்கு குதிரை வாகனம்<br>மாலை : பிச்சாடனர். | |
| 9–ம் நாள் | – | பல்லக்கு நால்வர் உற்சவம் ரிஷப வாகனம் | |
| 10–ம் நாள் | – | காலை சபாநாதர் தரிசனம்<br>இராவணேஸ்வர தரிசனம்<br>அவரோஹணம்<br>பகல் அபிஷேகம். | |

குறிப்பு : கார்த்திகை கடை ஞாயிறு விழா, பிரம்மோற்சவமும், மாத உற்சவங்களும், உபயதாரர்கள ஒத்துழைப்பால் நடைபெறுகின்றன. தவிர கோயிலில் பஞ்சபர்வ உற்சவங்களும் நடக்கின்றன.

# கோயில் வரலாறு

பாரத திருநாட்டில் புண்ணியத் தலங்கள் பலப்பல. அவற்றுள் தென்னாடு மூர்த்தி, தலம், தீர்த்தங்களால் பெருமை வாய்ந்தது. தென்னிந்தியாவில் தமிழ்நாட்டின் சோழ நில தொண்டை நன்னாட்டில் க்ஷீரமாநதி எனப்படும் பாலாற்றின் தென்கரையில் அமைந்துள்து. விரிஞ்சை மூதூர், விரிஞ்சையம்பதி, திருவிரிஞ்சிபுரம் என்று பலவாறு அழைக்கப்படுகின்றது இப்பழம்பெரும் சிவஸ்தலம்.

என்னாட்டவர்க்கும் இறைவனாம் அம்மையப்பர் வழிபாட்டில் வைப்புத்தலமுமான அருள்வடிவு, ஒளி, நன்னீறு, மலைநாடு இவைகளோடு ஸ்ரீ சக்தி ஐந்தெழுத்துக் கோண அமைப்பும் நாளும் ஞாயிறும் வழிபல நல்கும் ஐம்பெருங்குணமும் தேவர் பலர் வணங்கி பேறு பல பெற்றதும் இக்கலியிலும் பாலபக்தனுக்கு திருமுடி வளைத்த தனிப் பெருஞ் சிறப்பும், வணிக குல சிவனடியார்க்கு வழித்துணை புகுந்த மாண்பின் அருளும், ஏனைய பலப்பல பெருங் கருணைகளை வழங்கியும், இனியும் வழங்கும் அழகு மிக்க மதிலோடு கூடிய பக்தகோடி பெருமக்கள் உய்ய மரகத கொடியிடையோடு அமைந்த ஸ்ரீ மரகதாம்பிகையோடு தன்னிலே தானாய் (சுயம்பு) லிங்கமாக ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரர் அருளும் அருங்காட்சியைக் கண்ட கண்களும் வாழ்த்தும், வாட்களும் மண்படிய வணங்கும், மெய்களும் முக்தி பெறும் என்பதில் ஐயமில்லை.

காரண காமிக ஆகமங்களுடன் வேத முதலானவைகளில் கௌரிபுரம் எனப்படும் திருவிரிஞ்சைபுரம் ஸ்தலமாகும். பரமசிவனிடத்தில் முதலில் தோன்றிய சக்தியால் வைக்கப்பட்டதால் வைப்பு ஸ்தலங்களில் ஒன்றாகியது. கண்ணார், நுதலார், கரபுரம் என்ற அப்பர் சுவாமிகளின் கூற்றும் இதனை மெய்ப்பிக்கின்றது. சிறந்த சிவ ஸ்தங்கள் 1008 என்பர். அவற்றுள் 108 மேலானவை. அவற்றுள் 18 விசேடமானவை. அவற்றுள் திருவிரிஞ்சை உன்னதமானது என்றும் புராணம் கூறுகின்றது. கற்றாரும் கல்லாதாரும் நினைத்தாலும், சேர்ந்தாலும் பெயரை சொன்னாலும் இங்கு உண்மை தவம் செய்தாலும், திருப்பணி செய்தாலும், இயன்ற சிறு தர்மம் செய்தாலும் முக்தியளிப்பதற்குரிய மாட்சிமை உடையது இத்திருத்தலம்.

இதன் சிறப்பினை வடமொழியிலுள்ள சிவ ரகசியம் 11-ம்

அம்சத்திலும் பிரம்மாண்டபுராணம் 76ம் அத்யாயத்திலும், காஞ்சிபுராணம் 30ம் அத்தியாயத்திலும், காளத்தி மான்மியத்திலும், அருணகிரி புராணத்திலும் சொல்லப்பட்டுள்ளது. மேலும் இத் திருத்தலம் மகான் ஸ்ரீ ஆதி சங்கரரின் பீஜாட்சர பிரதிஷ்டைப் பெற்றதாகும்.

**ஸ்தலத்தின் இருப்பிடமும், பெருமையும்** : தொண்டை நன்னாட்டில் வடாற்காடு அம்பேத்கார் மாவட்டத்தில் அமைந்துள்ள வேலூர் மாநகர்க்கு மேற்கே சுமார் 13 கி.மீ. தூரத்திலும், காட்பாடி – ஜோலார்பேட்டை இருப்புப் பாதை தடத்தில் விரிஞ்சிபுரம் என்ற நிலையத்தின் தெற்கே 5 கி.மீ. தூரத்தில் பாலாற்றின் தென்கரையில், தென்னை நெல் வயல்கள் சூழ மதில் அழகோடு விளங்குகிறது திருவிரிஞ்சையம்பதி.

இத்திருத்தலத்தின் மேற்கே அரங்கநாதப் பெருமாள் துயிலும் ஆலயம் அமைந்த திரு உத்திரங்க க்ஷேத்திரமான 'பள்ளிகொண்டா' என்ற ஊரும், தெற்கே நந்தியம் பெருமாளுக்கு காட்சியளித்த கைலாயகிரியும் அமைந்துள்ளது. இத்தலத்தைச் சுற்றி 'இறையன்காடு' (இறைவன் காடு), 'மரகதவல்லிப் பாளையம்' (மருது வல்லிப்பாளையம்), வேலாண்டகிராமம் 'வல்லண்டராமம்', 'பொய்கை சத்திய மங்கலம், முடிநாண்பட்டு (முடினாம்பட்) கலசம்பட்டு, வேலவன் குன்றம் (வாழ்வான் குன்றம்) கூத்தன் மங்கலம் (கொத்தமங்கலம்), வடுகன் தாங்கல், மகாதேவர்மலை, மயிலாடும்பாறை, கந்தனேரி என புராண பெருமை மிக்க சிற்றூர்கள் பல உண்டு. வள்ளியம்மை மணம்புரிய நம்பிராசனுடன் போர் புரிந்து போர்க்களமாகிய புண்ணியபூமியென்று இதனை சான்றோர் கர்ண பரம்பரையாக வழங்கி வருவதனை இத்திருத்தலத்தில் ஏனைய பெயர்களும் உறுதி கூறுகின்றன.

ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொருவருடைய மமதையை முழு முதற் கடவுள் அடக்க சாபமிட்டார் என்றும் அதன் பயனாக கிருதயுகத்தில் கௌரியும், த்ரேதா யுகத்தில் விஷ்ணுவும், துவாபரயுகத்தில் கரன் என்னும் சுராசுரனும், இக் கலியுகத்தின் முதலில் பிரம்மன் மனித ஜனன மடைந்து திரு விரிஞ்சிபுரத்தில் பிரம்மதீர்த்தம் அருகில் உலகத்திற்கு க்ஷேமம் தரக்கூடியவராக தவம் செய்ததன் பயனாக சிவபெருமான் பிரத்யட்சமாகி பிரம்மாவின் வேண்டுகோளுக்கிணங்கி திருவிஞ்சிபுரத்தில் இருக்கும் லிங்கத்தில் வாசம் செய்கிறார், விரிஞ்சன் என்று பிரம்மாவுக்குப் பெயர். பிரம்மா பூஜை செய்ததனால்

பிரம்மபுரம், விரிஞ்சிபுரம் என்ற பெயர் பிரசித்தமானது. கௌரி, திருமால், கரன் இவர்கள் எம்பெருமானை இங்கு பூஜித்ததால் இத்தலத்துக்கு கௌரிபுரி, விண்டுபுரி, கரபுரம் என்ற பெயர்களும் உண்டு.

அருணகிரிநாதர் இப்பதி முருகன் பேரில் பாடிய பதினைந்து திருப்புகழ் பாடலகளில் விரிஞ்சை என்று மூன்று பாடல்களிலும், கரபுரம் என்று இரண்டு பாடல்களிலும், கரபுரி என்று பத்துப் பாடல் களிலும், இத்தலத்தின் பெயரைக் குறிக்கிறார். "கழனி நெடுவாளை கழுகொடிய மோதும் கரபுரியில் வீறும் பெருமாளே" என்று பத்துப் பாடல்களின் ஈற்றிலே கூறுகிறார், ஒரு பாட்டில்

கமுகினிற் குலைறக் கதலியிற் கனியுகக்

கழையின்முத் தழுதிரக் கயல்குதித் துலவுநற்

கனவயற்றிகழ் திருக்கரபுரத்தறுமுகப் பெருமாளே

என்று சொல்கிறார். மற்றொன்றில் "திசைதொறும்பர பூபதி திசைமுன் பராவிய திரு விரிஞ்சை மேவிய பெருமாளே" என்று பிரமன் இங்கு வழிபட்டதைக் குறிக்கிறார்.

தவிரவும் இத்தலத்திலுள்ள சுயம்புமகாலிங்க மூர்த்தியின் பேரில் பகலவனின் ஒளிக்கதிர்கள் பங்குனி மாதத்தில் விழுவதால் இத்தலம் (பாஸ்கர க்ஷேத்திரம்) என்றும் அழைக்கப்படும். இம் மாதிரி சோழ நாட்டில் பனையபுரம் நேத்ரோதாரகேசுவரர் கோயில் மகாலிங்க மூர்த்தி பேரில் ஞாயிற்றின் கதிர்கள் விழுகின்றது.

இக் கோயில் பாலியாற்றின் தென்கரையில் ஊருக்கு நடுவில் அழகிய தென்னை மரங்களுடன் கிழக்கு நோக்கிப் பாங்குற அமைந்திருக்கிறது. இயற்கை யெழிலின் நடு நாயகமாக இலங்குகிறது. ஊருக்கு வெகு தூரத்திலேயே வானுற நிமிர்ந்து நிற்கும் அழகிய கோபுரம் காண்போர் மனதை ஈர்க்கும் வண்ணம் காட்சியளிக்கும். கோயிலையடுத்து மாட வீதிகளும் நீண்டு அகன்ற தேரோடும் தெருக்களும் இவற்றினிடை ஆங்காங்கே விழாக்காலங்களில் தங்குவதற்கேற்றவாறு பல வகுப்பினர்களின் சத்திரங்களும் (சுமார் நாற்பது) அமைந்துள்ளன. கம்பீரமான உயர்ந்த மதிற் சுவர்கள் ஆலயத்தின் அழகைச் சிறப்பாக எடுத்துக் காட்டுகின்றன. எனவே "மன்னர் குடி மதிலழகு" என்று சோழ நாட்டில் கூறுவது போல தொண்டை நாட்டில் "திரு விரிஞ்சை மதிலழகு" என்று சொல்லுகின்றனர். சுவாமி சந்நிதி கிழக்கு நோக்கி

இருக்கிறது. கிழக்கு கோபுர வாயில் வழியேதான் கோயிலுக்குள் போக வேண்டும். முன்னே பெரிய கோபுரம் எனப்படும் இராஜகோபுரம் சுமார் 110 அடி உயரத்தில் ஏழு நிலைகளுடன் விளங்குகிறது.

கீழ்கோபுரம் வாயில், மேல் கோபுர வாயில், திருமஞ்சன வாயில் என்று முறையே கிழக்கு, மேற்கு, வடக்குப் புறங்களில வாயில்கள் இருப்பினும் தென்புறம் மட்டும் வாயில் இல்லாமல் மதில்மேல் கோபுரம் மட்டும் உள்ளது. நாள்தோறும் இராக்காலங்களில் தேவர்கள் வந்து எம்பிரானை பூஜை செய்து விட்டுப்போவதால் அவ்வழி தேவர்க்காக ஏற்பட்டதாகவும் அதனால் மானிடர் யாரும் அப்பக்கம் செல்ல வழி ஏற்படுத்தவில்லையென்று ஐதிகமாகக் கூறப்படுகிறது.

கோயிலின் உள்ளே இருந்து வெளிமதில் வரையில் ஐந்து பிரகாரங்கள் உள்ளன. வெளிமதில் பிரகாரத்தில் பிரம்மனால் உண்டாக்கப்பட்ட பிரம்ம தீர்த்தமும், தீர்த்தக்கரையில் பிரம்ம புரீஸ்வரர் ஆலயமும், தீர்த்தவாரி மண்டபமும் உள்ளன.

கிழக்கு வாயிற்கோபுரத்தை தாண்டி உள்ளே சென்றதும் முன்னே இடது பக்கம் சக்தியின் பல அவதாரங்களைச் சிற்பங்களாகத் தன்னிடத்தே கொண்ட நாற்கால் மண்டபமான சக்தி மண்டபமெனும் விடாயாற்றி மண்டபமும், அதை அடுத்து மேற்கே த்வஜாரோகண மண்டபமெனும், பதினாறுகால் மண்டபமும், அதற்குத் தெற்கில் ஒரு சிங்கத்தின் வாய் வழியாக நுழைந்து செல்லும் முறையில் அமைந்துள்ள சிம்ம தீர்த்தமும் உள்ளன. ஈசனார் திருமுடி-வளைத்த வரலாற்றுச் சிற்பங்களுடன் தென் மேற்கிலும் வடமேற்கிலும் இதர அபூர்வ சிற்பங்களும் கொண்ட திருக்கலியாண மண்டபங்களும், இவைகளுக்குமிடையே சிந்தூர கணபதி, 1008 சிவலிங்க சந்நிதிகளும இருக்கின்றன. வடகிழக்கே ஸ்ரீ நடராஜர் மூல உருவமும் கற்சிலையில் உள்ள நூற்றுக்கால் மண்டபமும் வடமேற்கு கலியாண மண்டபத்துக்கும் வட கிழக்கு நூற்றுக்கால் மண்டபத்துக்கும் நடுவில் சூலி தீர்த்தம் வசந்த நீராட்டக் கட்டம் காலம் காட்டும் கல் ஆகியவற்றையும் நூற்றுக்கால் மண்டபத்துக்கு முன்னால் மேற்கே கால பைரவ சந்நிதியையும் கண்டபின் கிழக்கு கோபுர வாயிற்கு நேர் கிழக்கே முன்னால் உள்ள துவஜஸ்தம்ப மண்டபத்தில் பலிபீடம், துவஜஸ்தம்பக் கம்பம் , மஹா நந்தியையும் கடந்து சம்புவராய" வாயிற்படியையும் தாண்டி கோயிலுக்குள்ளே போக வேண்டும் என்றால் வெளியில் இருக்கும் ஸ்ரீ ஏரம்ப விநாயகரையும் ஸ்ரீ

தண்டபாணியையும் தரிசித்து விட்டுத் தான் செல்ல முடியும்.

கோயிலினுள் இரண்டாம் பிரகாரத்தில் சுவர்ண கணபதி, ஸ்ரீ ராமலிங்க அடிகளார், நவக்கிரகம் சனஸ்வரர், சுதையால் ஆகிய அழகிய பிட்சாடனர், வல்லபை கணேசர், உற்சவ மூர்த்திகள் சந்நிதி களையும், மேற்கே ஹரிஹர புத்திரர் எனப்படும் ஸ்ரீ ஐயப்பன், ஸ்ரீ ஆறுமுகர் சந்நிதி, யுகலிங்கங்களுடன் சோழ நாட்டில் திருவானைக் காவல் ஸ்ரீ ஜம்புகேஸ்வரர் கோயிலில் உள்ளது போல ஸ்ரீ பஞ்சமுக் சதாசிவலிங்கமும் காசிலிங்கம் சந்நி, சோமதீர்த்தம், வடக்கே உக்கிராண அறை யாகசாலை சூரிய பகவான், 108 லிங்க சந்நிதிகளையும் காணலாம். இப்பிரகாரத்தின் வடமேற்கே இறைவியின் சந்நிதி இருக்கிறது தேவியின் திருப்பெயர் மரகதவல்லி என்பது. ஸ்ரீ தேவியின் சந்நிதி செல்லுமுன் முதலில் இடது பக்கம் உள்ள ஸ்ரீ செல்வ விநாயகரை வணங்கிய பின் உள்ளே சென்றால் மகா மண்டபத்தில் சுதை‍யில் அழகாகச் செய்யப்பட்ட இலக்குமி, கலைமகள் இவர்களுகவு மத்தியில் மலை மகளான மரகதவல்லியையும் முறையே கஜம், மயில் சிம்ம வாகனங்களுடன் காணலாம். சுற்றுப் பிரகாரத்தில் ஸ்ரீ சண்டிகேஸ்வரியையும் காலபைரவரையும் பார்க்கலாம். தேவியின் சந்நிதிக்கு நேர் கிழக்கே தெற்கு நோக்கி ஸ்ரீ நடராஜர் சந்நிதி உள்ளது.

கோயிலினுள் மூன்றாம் பிரகார ஆரம்பத்தில் நிர்த்த மண்டபத்தில் ஸ்ரீ சந்திர மௌலீஸ்வரர், நால்வர் சந்நிதிகளையும் துவாரக பாலர்களையும் தாண்டி உள்ளே சென்றால் நிருத்தன கணபதி, தட்சிணாமூர்த்தி சப்தமாதாக்கள், இலக்குமி, சரஸ்வதி, வாசுதேவப் பெருமாள், பிரம்மா, துர்க்கை, சண்டிகேசுவரர் முதலிய மூர்த்திகள் உள்ளன.

கடைசியாக மேற்கண்ட பிரகாரங்களை வலம் வந்து மகா மண்டபத்தைத் தாண்டி அர்த்த மண்டபத்தைக் கடந்து கர்ப்பக் கிரகத்தையடைகின்றோம். இறைவன் சுயம்புலிங்க மூர்த்தியாக சற்றுச் சாய்ந்த வண்ணமாக காட்சி அளிக்கிறார்.

கர்ப்பக்கிரக அமைப்பு ஓங்கார வட்டவடிவமாக அமைந்துள்ளது. மேலே உள்ள ஸ்தூபி சிம்ம ஆஸனத்தோடு கூடிய ராவணேசுவர கைலை நாதனாக ஏகமுக ஸ்தூபியும், நான்கு வேதங்களை உணர்த்தும் நான்கு கலசங்களும் அமைந்துள்ள இந்தக் கர்ப்ப கிரகத்தைச் சுற்றி கல்வெட்டுச் சாசனங்கள் நிறையக்கிடக்கின்றன.

அம்பாள் கர்ப்பக் கிரகம் பாதாள அறையுடன் கூடியது இவ்வறை வழியாகத்தான் வேலூர்க்கோட்டை கோயிலுக்கு எட்டு மைல் தொலைவுக்கு கற்களால் அமைக்கபெற்ற பாதாள வழி இருந்ததாகவும் தற்போது தூர்ந்து போய் விட்டதாகவும் கர்ண பரம்பரையாகச் சொல்லப்பட்டு வருகிறது.

## இறைவன் எழுந்தருளியுள்ள விசேஷம்

இம்மகாலிங்க மூர்த்தி பிரமனுக்கு அருள் பாலித்து சிருஷ்டி முறையினைத் தெரிவித்தபடியாலும், "காளி" என்றழைப்பதற்கேற்ற கருமை நிறத்தை மாற்றம் மூர்த்தியை அம்பிகை பூஜித்ததாலும் அவுணர் குலத்தினனான துந்து என்ற அசுரனை அழிக்க சக்ராயுதம் பெற திருமால் பூஜித்ததாலும், கரன் எனும் கர்த்தப முகத்தோடு இருந்த கந்தர்வன் தன் சாபம் நீங்க பூஜித்ததாலும், இத்தலப்பெருமான் விரிஞ்சை விமலர், கௌரீசர், விஷ்ணுஈசர், சுரேஸ்வரர் என்றும், சிவசர்மன் எனும் பால பக்தனின் பூஜையைத் தம் திருமுடி வளைத்து ஏற்று அருள் செய்ததால் முடிவளைத்தவர் என்றும், சாவித்திரன் என்ற ஆர்யாவர்த்தன வாசியின் வேண்டுகோளுக்கிரங்கி மானிட பிறவியுடனேயே மோட்சம் கொடுத்ததால் இகபரநாதன், பரகதிக்குதவிய மோட்சனாதன என்றும், தனபாலனெனும் வணிக பக்தனுக்கு வழித்துணை சென்று உதவியதால் வழித்துணை நாதன், மார்க்க பந்தீஸ்வரர், மார்க்கசகாயர் என்றும் போற்றி வணங்கப்படுகிறார். தவிரவும் சூடுந்தமிழ்ப் பெருமாள் சுந்தரனார் வேடுபறியில் "வெண்ணெய் நல்லூர் காசி விரிஞ்சிபுரங்கேதாரம், அண்ணலொற்றியூர், கழுக்குன்றாடுதுரை - எண்ணுநல்லூர் எட்டீசருங் குடியீந்த பணம் பாதி என்பதிலிருந்து இத்தல நாதன் சுந்தரருக்குப் பொன் கொடுத்ததாகத் தெரிகிறது.

## தீர்த்தக்கட்டங்கள்

பாலாறு : இதன் இயற்பெயர் பத்மினி நதி. பிரம்மா காயத்ரி தேவியுடன் எம்பெருமானை வேண்டிச் செய்த யாகத்திற்கு இந்த நதியில் க்ஷீரம் (பால்) பெருகிற்றாம். அது முதல் இந்த நதிக்கு க்ஷீரா நதி அல்லது பாலாறு என்று பெயர் வந்தது. கௌரி, விஷ்ணு, பிரம்மன், கரன் ஆகியோர் பாலாற்றுக் கரையில் எம்பெருமானைப் பூஜித்ததால் இந்நதியில் நீராடுவது விசேஷமாகும். இந்நதிப்பக்கம் சப்த ரிஷிகள் வசித்து எம்பெருமானை வழிபட்ட ஆலயங்கள் இன்னும்

காணக்கிடக்கின்றன.

பிரம்ம தீர்த்தம் ஆலயத்துக்கு வெளிப்பிரகாரத்தில் தென் கிழக்கே பெரிய தடாகமாக அமைந்துள்ளது. பிரம்மனால் உண்டாக்கப்பட்டது. 'அயனும் அத்தலத்தொரு தடஞ் சமைத்தனன்" என்பது புராணவரி. இதன் நடுவில் நீராழி மண்டபம் உண்டு. அஷ்டவசுக்கள் தலங்கொண்டுள்ள படித்துறைகளுடையது. இத்திவ்யப் புஷ்கரணியில் ஆதி சைவப் பாலகனுக்கு பரமன் உபநயனம், பிரம்மோபதேசம், சிவ தீட்சை அனுக்கிரகித்துள்ள மாண்பில் மூன்று அக்கினி குண்டங்கள் அமைந்துள்ளன. எனவே சிறுவர்களுக்கு பிரம்மோபதேசமும், உபநயனமும் செய்விக்க இந்த பிரம்மக்ஷேத்திரம் மகிமை பெற்றது என்பது ஒரு முக்கியமான அம்சமாகும் சிவபெருமானே இங்கு பிரம்மோபதேசம் செய்வதாக ஐதீகம். ஆண்டுதோறும் மாசிமகம் பௌர்ணமி தொடங்கி மூன்று நாட்கள் தெப்பல் விழா இந்த தீர்த்தத்தில் நடைபெறும்.

சிம்ம தீர்த்தம் மகிமை ஸ்ரீகௌரி தீர்த்தம் என்றும் பெயர். இத் திருவிரிஞ்சைத்தலத்திற்குத் தனிச் சிறப்பை ஊட்டி வரும் ஆலயத்தின் உள்ள முதல் பிரகாரத்தில் தென்கிழக்கே உள்ள சிம்ம புஷ்கரணி ஸ்ரீ கௌரி தேவியால் தம் கருமை நிறம் நீங்க ஈஸ்வரனை வழிபட்ட சமயம் உண்டாக்கப்பட்டது. ஒரு சிங்கத்தின் வாய் வழியாக நுழைந்து செல்லும் முறையில் அமையப்பெற்ற ஒரு நடபாவிக்கிணறாகும். இந்த அமைப்பு சோழ நாட்டில் திருச்சி மாவட்டத்தில் உடையார் பாளையம பகுதியில் உள்ள கங்கைகொண்ட சோழபுரத்தில் உள்ளது. "உமையவளும் பாலித்தென் கரை மருங்கிலெய்தித் தீர்த்தம ஒன்றமைத்துத் தன் பெயரதற்கு நாட்டி" என்பது புராணவாக்கு. ஸ்ரீ ஆதி சங்கரர் பீஜாக்ஷர (மூவெழுத்து) யந்திரம் ஸ்தாபிக்கப்பட்ட புனிதத் தன்மையுள்ளது (பல்லாயிரக்கணக்கான பக்தர்கள், தாய்மார்கள் தம்மைப் பீடித்துள்ள தீக்காற்று, நலிநீக்கமடையவும், புத்ர சந்தானம் வேண்டி நீராடி ஈரவஸ்திரமுடன் ஆலய சன்னதி முன் படுத்துறங்கி பரமன் அனுக்கிரகம் நற்சொப்பனங்கண்டு அடுத்த ஆண்டு வந்து தொட்டில் பிள்ளை பிரார்த்தனைச் செலுத்தி மெய்ப்பேறு அடைந்து வருவது கண்கூடு.

சூலி தீர்த்தம் ஆலயத் திருமஞ்சன வாயில் அருகிலுள்ளது. திரிசூலத்தால் அமைக்கப்பட்ட இந்தத் தீர்த்தத்தில் நீராட விசேஷ பலன் உண்டு என மான்மியம் உணர்த்துகிறது.

சோம தீர்த்தம் : இது கோயிலினுள் இரண்டாம் பிரகாரத்தில் உள்ள கிணறு. ஆலயமூர்த்திகள் அபிஷேகத்துக்காக ஏற்பட்ட இந்த தீர்த்தம் சோமனால் (சந்திரபகவானால்) உண்டாக்கப்பட்டது-

ஆகவே மேலே குறிப்பிட்டத் தீர்த்தங்களில் நீராடி இறைவனை வழிபடுவோர் எல்லா வகைத் துன்பங்களும் நீங்கி இன்பம் அடைவர்.









கார்த்திகை கடை ஞாயிறு விழா சிறப்பு சிற்பங்கள்

# சுற்றுக் கோயில்கள்

## 1. முருகன் கோயில்

இது பெரிய கோபுரவாயிலுக்குப் பக்கத்தில் தெற்கு நோக்கி உள்ளது. முருகப்பெருமான் ஆறுமுகமும் பன்னிரண்டும் கரங்களும் கொண்டு வீற்றிருக்கின்றார். ஸ்ரீ அருணகிரிநாதரும் வரகவி மார்க்க சகாயதேவரும் அருள் பெற்று முறையே திருப்புகழும், பிள்ளைத் தமிழும் பாடியுள்ளனர்.

## 2. கைலாசநாதர் கோயில்

இது கோயிலுக்கு வடகிழக்கில் உள்ளது. சாவித்திரன் என்ற ஆர்யாவர்த்தனவாசிக்கு பெருமான் கைலைக்காட்சியளித்த காரணமாய் அமைந்துள்ளது.

## 3. அலையேற்றும் விநாயகர் கோயில்

இது கோயிலுக்குத் தென் புறத்தில் பிரம்ம தீர்த்தத்துக்கு அப்பால் உள்ளது. தனபாலனெனும் வணிக பக்த சிரோன்மணியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

## 4. அனுமார் கோயில்

இது மேல் பகுதியில் பாலாற்று நடுவே உள்ளது.

## 5. பொற்பனேசுவரர் கோயில்

இது பாலாற்று வடகரையில் கிலமடைந்து உள்ளது. ஸ்ரீ தேவி தம் கரு நிறம் நீங்க ஈஸ்வரனைத் தியானித்துப் பூஜை செய்த இடம்.

## 6. அங்காளம்மன் கோயில்

இது வடக்கு வீதியில் உள்ளது.

## 7. ஸ்ரீ அகோர வீரபத்திரர் கோயில்

இது மேற்கே உள்ளது.

## 8. காளிகாதேவி கோயில்

கோயிலுக்கு நேர் கிழக்கே தேரோடும் வீதியில் உள்ளது.

## 9. ஈசான்ய வினாயகர் (முத்துப் பிள்ளையார்) கோயில்

கைலாசநாதர் கோயிலுக்கு வடபுறம் உள்ளது.

## 10. சாவடிப் பிள்ளையார் கோயில்

இது கோயிலுக்கு வடக்கே சாவடித் தெருவில் உள்ளது.

## 11. ஸ்ரீ மீனாட்சி சுந்தரேஸ்வரர் கோயில்

இது ஸ்ரீ அப்பய்ய தீட்சதர் பிரதிஷ்டாஸ்தாபனமுடையது.

## 12. முத்தாலம்மன் கோயில், பொன்னி அம்மன் கோயில்

இவை மேற்குத் திக்கு எல்லையில் கிராம தேவதைகளின் கோயில்களாக உள்ளன.



சோமாஸ்கந்தர்

# ஸ்ரீ கௌரி பூஜையும் பனைஸ்தல விருக்ஷமான காரணமும்

ஆதியில் இப்பிராந்தியம் நைமிசாரணியமாக பாலிநதிக்கரையில் விளங்கியது. எம்பெருமான் ஸ்ரீகௌரி தேவியுடன் ஏகாந்தமாகயிருக்கையில் ஸ்ரீசக்தியை கருப்பு நிறமுடைய காரணமாக 'ஹே சங்கரி!' என்று ஈசனார் அழைக்க அந்நிலை பொறுக்கொணாது ஸ்ரீதேவி பாலிநதி வடகரையில் பொற்பனங்காடு எடுத்து பஞ்சாக்கினி மத்தியில் தவங்கொண்டிருக்க நித்ய மஹாலிங்க பூஜைக்குப் பொற்பனம் பழம் ஈந்துள்ளதாகவும் அம்மையை கவர்ந்திருந்த கருநிறக் கவசம் நீக்கமடைய மரகதக்கொடி இடையோடு கூடிய பொன்மேனிக் கொண்ட ஸ்ரீமரகதவல்லி தேவியாய் ஸ்ரீமார்க்கசகாயர் இடப்பாகம் கொண்டு உள்ளதின் காரணமாக தலத்தை ஸ்ரீகௌரிபுரி என்றும் பனைமரமே ஸ்தல விருக்ஷமெனவும் அறியப்படுகிறது. ஸ்ரீதேவி பூஜித்திருந்த பொற்பனேசுவரர் ஆலயம் பாலாற்றின் வடகரையில் சுவாமி தோப்பினுள் கிலமடைந்துள்ள நிலையில் இன்றும் காணலாம்.

தவிரவும் அம்மையை விட்டு நீங்கிய அக்கருநிறக்கவசம் கௌசிகையெனும் பெயர் பூண்டு மரகதவல்லியார் கட்டளையின்படி துன்பமியற்றிய சும்பநிசும்பாசூரரை வதைத்து, தேவர் முனிவரா துக்கம் நீக்கியதும் இத்தலமேயாகும்.

## திருமுடி வளைத்த வரலாறும் திருக் கார்த்திகைக் கடை (சி) ஞாயிறு விழாவின் தனிச்சிறப்பும்

அருணையம் பதியில் முடிகாண்கிலாது ஈசனாரின் திருமுடியில் இருந்து விழுந்த தாழம்பூவை சாட்சியாகக் கொண்டு ஈசனாரின் முடி கண்டதாகக் கூறி அதனால் அவதியுற்ற பிரம்மா வேண்ட, தேவ ரூபத்தில் காட்சி கொடுக்கக் கூடாது என்று அச்சதுர்முகனை தொண்டை நாட்டில் திருவிரிஞ்சை என்னும் சீரியபதியில் எம்பெருமானார்க்குச் சிவத் தொண்டு செய்யும் ஆதிசைவ தூய நன்மரபினரான குலவத்திரி மஹரிஷி கோத்திரத்தில் சிவநாதனெனும் சிவநேச அன்பனுக்கும் மங்கை நல்லாள் நயனா நந்தினி என்னும் உத்தமிக்கும் பாலகனாய் அவதரிக்கச் செய்தார். சிவசர்மனெனும் அப்பாலகனின் தந்தை சிறிது காலத்திலேயே சிவபதவியை அடைய, தாயார் திக்கற்ற மைந்தனான சிவசர்மனுக்கு உபநயனம், சிவதீட்சை செய்வித்துத்தன் பர்த்தாவின் பாகப்படி பூஜை செய்ய உதவுமாறு தன தாயாதிகளை எவ்வளவோ மன்றாடி வேண்டினாள். பாலகனின் தலைமை பூஜா உரிமை பாகத்தையும் காணியாட்சியையும் அபகரிக்க

எண்ணிய அறுபது வீட்டவர்களாகிய ஆதிசைவர்கள செவிமடுத்தாரில்லை ; அதற்குமாறாக தாயாதியார் சிவதீட்சைப் பெறாச் சிறுவனாஞ் சிவசருமனை விளையாடும் வழி மறித்து "உன தந்தை காலமானது முதல் நாங்களே ஈசனுக்கு பூசனை செய்து வருகின்றோம் ; ஆதலின் உனது சொத்துக்கள் யாவும் எங்கட்குச்சேர வேண்டியவை. நாளை உனது பூஜை முறை வருவதால் உன உரிமைத் தொழிலை நீ செயல் வேண்டும். இல்லெனில் உனக்குரிய பூஜை முறை நிலம் முதலியவைகளை அறவே எமக்கெழுதித்தரல் வேண்டும். இது விபரம் உமதன்னைபால் தெரிவித்து முடித்திடுக" என்றனர்.

முறைப்படி நடத்தினால் யானையும் வரவழைத்து சிறுபாலனை அலங்கரித்து யானை பேரில் ஏற்றி திரு குளக்கரையிலிருந்து கோவில் கதவு திறந்து பிறகு பொது தரிசனம் நடத்த ஏற்பாடு செய்ய இருக்கிறது. சுவாமி தீர்த்தவாரிக்கு போகும்போது ஆலய கதவை பூறாவும் தாளிட்டுவிடுவது ஞாயம். அதுபடி நடத்த இருக்கிறது.

பாலகன் மூலம் செய்தியாவும் அறிந்த தன்னந்தனியளான தாயானவள் மானிடர் யாரும் உதவி புரிய முன்வராதது கண்டு மனமிக வருந்தி விரிஞ்சையம்பதி மகேஸ்வரனிடம் கண்களில் நீர் சோரப் பக்தியோடும் தன் குறைத்தீர்க்கும்படி முறையிட்டு வீடடைந்தனள். வீடடைந்த அன்று கார்த்திகை விரிச்சிகமதியின் கடை ஞாயிறு முதல் நாள் சனி இரவு தன் மைந்தனைப் பக்கமணைத்துப் பாயில் படுத்துறங்கவும் தன்னையடைந்தார் வல்வினைத் தீர்க்கும தயாபரனான ஈஸ்வரன் அன்றிரவு அவள் கனவில் அவள் தந்தை போல் தோன்றி... சூரியன் தினமாம் நாளைய நன்னாளில் நம்மாலயப் பிரம்ம தீர்த்தத்தில் உன் சுதனை, மங்கள நீராட்டிவை யெனவும் அதன்பின் நாம் காட்டுவோம் நன்னெறி" என உறுதி மொழி கூறி மறைந்தார்.

ஈசனாரின் ஆக்ஞைப்படி தாய் நயனா நந்தினி தன் மகனை நீராட்ட குளத்தின் அருகில் அழைத்துச் செல்ல, தாயாதியர் பலரும் தீட்சைப் பெறாத பாலகனால் இன்று ஆலய பூஜை செய்வது எத்தகையது என்று கோவிலின் திருவாயிற் கதவினைப் பூட்டி நிற்க, தீர்த்தக் கரையில் பரமனார் ஒரு கிழவர் போல வந்து பாலகனுடன் தீர்த்தத்தில் மூழ்கி ஓர் முகூர்த்தக் காலத்திற்குள் பாலகனுக்கு உபநயனம், பிரம்மோபதேசம் சிவதீட்சை யாவும் அருள்பட பாலகனுடன் கரையேறியதும் பிரம்ம தீர்த்தக்கரையில் மஹாலிங்கமாக மறைந்தார். (பிரம்ம தீர்த்தக் கரையில் பிரம்மபுரீஸ்வரர் ஆலயம் இன்றும் காணலாம்). திருக் குளத்தில் மூழ்கிய சிறுவன் சிவபூஜை செய்வதற்குரிய தீட்சைப் பெற்றவனாக கரையேறுதலைக் கண்ட யாவரும் வியப்படைந்தனர். தேவர்கள் யாவரும் பூமாரி பொழிந்தனர். பரமனார் சனி வாரமிரவு தத்தம் கனவில் இட்ட கட்டளைப்படி

சுற்றுப்புற மன்னர்கள், பலரும் வியக்கும் வண்ணம், பாலகனை மேனாவிலமர்த்தி சகல விருதுகளுடன் யானை மீது திருமஞ்சன குடத்துடனும் ஊர்வலமாக அழைத்து வந்து கோவிலின் முன் நிறுத்த, பூட்டப்பட்டிருந்த திருவாயிற் கதவுகள் தாமாகவேத் திறந்து கொண்டன.

இவற்றையெல்லாம் கண்ணுற்ற தாயாதியர் மட்டும் ஐயுற்றுத் தீர்த்தாபிடேகம் செயற்பானோ. கண்டுணர்வோம் என்று சற்று ஒதுங்கி நிற்க, சிவசர்மனோ கற்றுணர்ந்து பழகியவன் போல் ஆகம விதிப்படி அங்க சுத்தி, ஆன்ம சுத்தி, முதலான பஞ்ச சுத்தியாவும் முடித்து சுவர்ண கணபதியை ஆராதித்தபின், கையில் திரு மஞ்சன குடத்துடன் பகவானுக்கு அபிஷேகம் செய்ய எத்தனிக்கையில், மஹாலிங்கம் உயரமாக இருந்ததால் திருமுடி எட்டவில்லை, அது கண்டு 'எந்தையே! எனக்கு எட்டவில்லையே நும்முடி!' என்று உருகி நின்ற பல பக்தர்களின் பக்திக்கு இரங்கி ஈசனார் தம் திருமுடியை வளைத்தார் இதனையே,

*அலை வளைந்திடும் புவியிடத்துடலுயிரனைத்தும்*
*தலை வளைந்தன வளைந்தன விமையவர் தருவுஞ்*
*சிலை வளைந்திடும் செயலெனத் திசை திசை செறிந்த*
*மலை வளைந்தன வழித்துணைவர் முடி வளைக்க*

*என்றும்*

*கங்கைமாநதி குமுகுமென்றொலித்திடக் கடல்போற்*
*றிங்களானதுகவிழ்ந்து சிற்றமுதினைச் சிதற*
*வங்கை வார்சிலைநாரிபோற் றாழ்ந்திட வரவ*
*மங்கையாளுடனுறைபவன் றிருமுடி வளைத்தான்*

என்றும் திருவிரிஞ்சைப் புராணத்தில் சைவ எல்லப்ப நாவலர் அழகு படக் கூறியுள்ளார்.

இவ்வாறு பெருமான் திருமுடி வளைத்து சிறுவன் முறைப்படி செய்த பூஜைகளை ஏற்றுக் கொண்டார். அதே கோலத்தில் இன்றும் முடிசாய்த்த மகாலிங்கமாக ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரர் காட்சி அளிக்கிறார்.

இத்தலத்தில் பாலக பிரம்மாவான சிவசர்மனுக்குத் திருமுடி வளைந்து கொடுத்தது போலவே, சோழ நாட்டில் திருச்சி சமீபம் உள்ள திரு எறும்பியூர் என்னும் தலத்தில் மலைக்கோயில் ஈசனார் ஓர் எறும்புக்காக முடிசாய்த்து அருளியதும் திருப்புகலூரில் மூலத்திரு யுருவம் சாய்ந்து கோணேசர் என்று பெயர் வழங்கி வருவதும், திருப்பனந்தாளில் தாடகை என்னும் நங்கை நல்லாள் பொருட்டுத திருமுடி வளைந்து அருளியதும் போற்றத்தக்கவையாம். பாலபக்தனான பிரம்மாவுக்கு ஈஸ்வரன் தன் திருமுடியைச் சாய்த்து

பூஜையை ஏற்றுக் கொண்ட நாள் கார்த்திகைக் கடைசி ஞாயிற்றுக் கிழமையானபடியால் அன்றுத்தொட்டு பிரதி கார்த்திகை மாதம் கடைசி, ஞாயிறில் இந்த ஐதீகப்படி யாவும் நடந்து வருகிறது. ஆகவே அன்று தேவர்கள் யாவரும் இந்தப் புனிதமான தலத்துக்கு எழுந்து அருளுவதாக ஐதீகம். எவர் ஒருவர் இம்மாதம் கடைசி ஞாயிறன்று ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரரை வணங்குகிறாரோ அவர்கட்கு வாழ்க்கைத் துணைவராக இருந்து வாழ்க்கையிலேயே பலவித இன்னல்களை நீக்கி நன்மைகள் செய்வார் என்பது திண்ணம்.

**கார்த்திகைக்கடை ஞாயிறு ஐதீக விளக்கச் சிற்பங்கள்**

**தென்மேற்கு கலியாண மண்டபத்தின் அடித்தளத்தில் உள்ளன.**

தவிரவும் அன்று இத்தூயதல ஆலயத்துள் ஸ்ரீ கௌரி தேவியால் உண்டாக்கப்பட்டதும் ஸ்ரீ ஆதி சங்கரரால் பீஜாக்ஷர பிரதிஷ்டை செய்யப்பட்டதுமான சிம்மகுளம் என்ற தீர்த்தத்தில் குழந்தை இல்லா பெண்களும், பைசாசம், முனி, மோஹினி, பில்லிசூனியம் முதலிய தீக்காற்றுப் பிடிக்கப்பட்டோரும், மங்களநீராடி ஈரத்துணியுடன் பகவான் முன் பிராணாசாரம் விழுந்து நித்திரை செய்தபின் அவரவர்கள் பூர்வபாவங்கள் நசித்து, காற்று கருப்புகளை அறவே விலக்கி, ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரர் அருட்பிரசாதம் அவர்களுக்கு கனவில் கொடுத்தபின் அவரவர்கள் கர்ப்பம் தரித்து சந்ததியை அடைகிறார்கள். இன்றும் இந்த க்ஷேத்திரத்தில் இந்த விசேஷம் நடந்துக் கொண்டிருக்கிறது.

கார்த்திகைக் கடை ஞாயிறு விழா இரவு எம்பெருமானால் பஞ்சமூர்த்தி ரிடபவாகனராய் சாவித்திரான் என்ற ஆர்யா வர்த்தன வாசிக்குக் காட்சி கொடுத்து மானிடப்பிறவியுடனே ஸூர் விமானத்தில் கைலைக்கு அழைத்துச்சென்ற கைலைக்காட்சி மஹாமேருஉற்சவமும் சிறப்புடன் நடைபெறுகிறது. ஆகவே அன்று ஸ்ரீ மார்க்கபந்திஸ்வரர் பஞ்சமூர்த்திகளுடன் மஹாமேரு பர்வத ரதத்தில் ஊர்ந்துவர கைலையங்கிரீஸ்வரர் ஆலய முகப்பில் தரிசிப்பவர்களுக்கு முழு பலனும் உண்டு என மான்மியம் கூறுகிறது.

**கைலைக் காட்சி சாவித்திரனுக்கு காட்டிய வரலாறு**

முன்னொரு காலத்தில் ஆர்யாவர்த்தன வாசியான சாவித்திர னென்பவர் சர்வசாஸ்திர விற்பன்னராய் தீர்த்தயாத்திரை செய்யத் தொடங்கி பல தலங்களுக்கும் சென்று தரிசித்து கங்கை காவிரி குமரி முதலிய தீர்த்தங்களில் நீராடித் திருவிரிஞ்சைத் [illegible]டந்தார் பாலாற்றின் வடகரையில் ஆகமதேசிகர் என்னும் மாமுனிவர் தம் மாணவர்களுக்குக் கைலாய மலையின் அருமை பெருமைகளைப் பற்றி சொல்லிக் கொண்டிருந்ததைச் சாவித்திரனும் உடனிருந்து கேட்கவே தனக்கு கைலையைத் தரிசிக்க பேரவாவென்றும் அது எளிதோ? அரிதோ? என வினவ, அதற்கு அம்முனிவர் "கைலை வாசியான சுந்தரரும், எம்பெருமானார் வெள்ளை யானையை அனுப்பி அழைத்த

பிறகுதான் கைலை செல்ல முடிந்தது. நாவுக்கரசர் கைலை காண முயன்றும் முடியாமல் திருவையாற்றில் கைலைக்காட்சி கண்டார்; காரைக்கால் அம்மையார் தம் தசைகளை நீக்கித் தலையால் நடந்து சென்று கைலை அடைந்தார் ; ஆகவே சாதாரண மானிடராகிய நாம் கைலை காணுவது கடினம்" என்று கூறவே, சாவித்திரன் ஒரே தவராக்கியமாய் 'நான் இப்பிறவியுடனேயே கைலாயம் அடைவேன்' என்று பாலாற்றில் நீராடிப் பெருமானை நோக்கி கடுந்தவம் புரிந்து, ஈசான்யம் ஸ்ரீகைலாயநாதன் திருவடி அடையும்படி அக்கினிகுண்டம் வளர்த்து தம் சரீர தசை மாமிசாதிகளை அவிர்ப்பாகமாக அறுத்து மஹா உக்ரயாகம் நடத்தப்படயிருக்கையில் ஸ்ரீ மார்க்கசகாயர் ரிடப வாகனத்தில் காட்சி கொடுத்தார், பெருமானருளால் ஓர் விமானம் தோன்ற அதில் சாவித்திரன் ஏறிக் கொள்ள ரிடப வாகனம் முன்னே செல்ல விமானம் பின்னே சென்றது. இக்காட்சியை எல்லோரும் கண்டு களித்தனர். சாவித்திரனுக்குப் பெருமான் காட்சியளித்த இடம், இப்போது கைலாசநாதர் கோயிலாக விளங்குகிறது. இக் கைலைக் காட்சி உற்சவம் கார்த்திகை கடை ஞாயிறு விழாவன்று இரவு இன்றும் சிறப்புடன் நடைபெறுகிறது. கைலாசநாதர் கோவிலை புதுப்பித்து பூஜை கிரமங்களை நேமித்து அதற்காக உற்சவம் ஏற்படுத்த இருக்கிறது.

## வழித்துணை வந்த வரலாறு

மைசூர் குந்தளபுரியில் தனபாலன் எனும் வணிக சிவனேய அன்பர் கொள்வது மிகாமலும், கொடுப்பது குறையாமலும் மிளகு வாணிபம் செய்துவந்தார். தெய்வ பக்தியிலும் தீவிர மனமுடைய தனபாலன் ஒரு சமயம் காஞ்சிபுரத்துக்கு மிளகு வியாபாரம் நிமித்தம் எருதுகளில் மிளகுப் பொதிகளை ஏற்றி புறப்பட்டுவர, மாலைப் பொழுதானமையால் விரிஞ்சையம்பதியில் தங்க நேரிட்டது. காஞ்சிக்குச் செல்லும் மார்க்கத்தில் வேடர்கள் வழிப்பறி செய்து பொருள்களைக் கவர்ந்து செல்வதைக் கேள்வியுற்று திகைத்து காஞ்சி செல்வதா ஊர் திரும்புவதா என்று பலவாறு சிந்தித்தார். ஊருக்குத் திரும்பினாலும் வந்த இடத்தில் விற்றாலும் நஷ்டம் உண்டாகுமே என்று எண்ணி விரிஞ்சைப் பெருமானின் சன்னதியடைந்து "பரமனே நீ எனக்கு வழித்துணையாய் வந்து காக்கின் பத்துபொதி மிளகு காணிக்கையாகத்தருகிறேன் என்று வேண்டி அன்று இரவு தங்கி இருக்கவே, பெருமான் கனவில் தோன்றி , "நாளை உனக்கு நல்ல வழித்துணை வரும். நீ பயமின்றி மிளகுப் பொதிகளை ஏற்றிச் செல்வாய்" என்று அருளினார். அதன்படியே பிரானும் வேடுவர்குல தலைவராக வெள்ளைப் பரியில் வந்து வழித்துணை சென்றார். பெருமான் குதிரை வீரனாக வந்த கோலத்தை திரு விரிஞ்சைப புராண ஆசிரியர் சைவ எல்லப்ப நாவலர், பங்குனி மாத பிரம்மோற்சவத்தின்போது 8-ம் நாள் குதிரை வாகன காக்ஷியில் வழித் துணை நாதன் என்பதற்கு ஒப்ப தகுந்த ஜதிகங்களனைத்தும்

செய்து இருக்கிறது. வேடுவ வேடம் மானிட அன்பர்களுக்குள் சிலரை வேடம் போட்டு வழிபறி செய்வதாக வடவாண்டை மாட வீதியில் செய்து காட்ட இருக்கிறது.

"வெள்ளை மால்விடை நீலவாம் புரவியாய் விளங்கப்
பிள்ளைவான் பிறைக்கேதகைமடலெனப் பிறங்கத்
துள்ளு நீர்த்திரைக் கங்கைமேற்பாகையாய் துலங்கப்
புள்ளி மாவுரிப்பட்டுடை யாடையாய் பொருந்த"

என்று அழகுபடக் கூறுகிறார்.

இவ்வாறு பெருமான் குதிரைமேல் அமர்ந்து முன்னே வழிகாட்டிச் செல்லத் தனபாலனும் மிளகுப் பொதிகளுடன் பின்னே தொடர்ந்து செல்ல, பருத்திக்குன்றம் என்ற இடம் சேர நேர்ந்தது. பருத்திக் குன்றம் என்ற இடம் வேடர்கள் உறையும் இடம். யானை, சிங்கம், புலி முதலிய கொடிய வனவிலங்குகள் வாழும் இடம். தன் அடியார்களை பலவாறு சோதிப்பதையே தன் தொழிலாகக் கொண்ட எம்பெருமானார் தனபாலனுடைய பக்தியைச் சோதிக்க விரும்பி, அவ்விடத்திலிருந்த குதிரையை வேறு வழியாகத் திருப்பி மறைந்தனன். வேடர்கள் இதுதான் தக்க சமயமென்றெண்ணி தனபாலனைப் பிடித்துப் பலவாறு துன்புறுத்தி மிளகுப் பொதிகளையும், பிற பொருள்களையும் கவர்ந்து சென்றனர். தனபாலன் மனமிக நொந்து விரிஞ்சைப் பதியைச் சிந்தித்து முறையிட உற்ற இடத்து உதவும் தயாநிதி முன்போல் தோன்றி கவர்ந்து சென்ற வேடர்களை மிளகுப் பொதிகளுடன் கொண்டு வந்து நிறுத்தினார். வேடர்களின் நெற்றியில் திருநீற்றைக் காணவே, அவர்களைச சிவனடியார்களாகக் கருதி கடந்தவை யாவும் எம்பெருமானின் திருவிளையாடல்களென நினைத்து அவர்களுக்குத் தக்க பொருள் தனபாலன் கொடுத்து காஞ்சிக்கு தனபாலன் செல்ல, காஞ்சிபுரம் வந்தவுடனே வழித் துணையாக வந்த பிரான் தனபாலனிடம் விடை பெற்றுச் சென்றார். மிளகுப் பொதிகள் நல்ல விலைபோகவே, பணத்தின் குறியால் கவனமின்றி தனபாலன் விரிஞ்சைப் பெருமானார்க்குக் காணிக்கையாகக் கொடுப்பதாகக் கருதியிருந்த பத்து பொதி மிளகையும் சேர்த்து விற்று விட்டான். மறு நாள் மிளகுப் பொதிகள் யாவும் பயறுகளாகக் காணப்பட வாங்கிச் சென்ற இதர வியாபாரிகள் திரும்பி வந்து தனபாலனைப் பலவாறு இகழ்ந்து பேசி குறை கூறினார்கள். பெருமானுக்குரிய பொதிகளையும் சேர்த்து விற்றதால் இவ்விதம் நேர்ந்தது என்று தன் தவற்றை உணர்ந்துமுன் கொடுப்பதாகச் சொல்லிய பத்து பொதிகளுடன் தப்புக் காணிக்கை யாக மேலும் ஒரு பொதி சேர்த்து தருவதாக இறைவனை வேண்ட இறைவன் திருவருளால் பயறுகள் மீண்டும் மிளகுகளாயினது கண்டு தனபாலனும் மற்ற வணிகர்களும் கருணாமூர்த்தியின் அருஞ் செயலைப் போற்றி மகிழ்ந்தர்ர்கள்.

தனபாலன் 11 மிளகுப் பொதிகளையும் விரிஞ்சைப் பெருமானுக்கு சேர்ப்பித்ததோடல்லாமல், பிரம்ம தீர்த்தத்துக்கு அப்பால் தெற்கே ஓர் விநாயகரையும் ஸ்தாபித்ததாக புராணம் கூறுகிறது. அலையேற்ற விநாயகர் என்ற பெயருடன் அவ் விநாயகர் போற்றி வணங்கப்படுகிறார். தனபாலன் தன்னூர் சென்று வழித்துணை நாதரை மறவாமல் வழிபட்டு வந்து முக்தியடைந்தார். விரிஞ்சைப் பெருமான் வழித்துணையாய் வந்து உதவியதால் மார்க்கபந்தீஸ்வரர், மார்க்க சகாயர், வழித்துணை நாதர், வழித்துணை மருந்தர் என்றெல்லாம் அழைக்கப்படுகிறார். இந்த ஐதிக விநாயகர் ஆலயத்தை ஜீர்ணோத்தரண கும்பாபிஷேகம் செய்தல்.

வழித்துணைபோன வரலாற்றைத் தெரிவிக்கும் சிற்பங்கள கோயிலின் மதிற் சுவர்களில் உள்ளது.

**கரன் எனும் கராசுரனுக்கு அருள்பாலித்த வரலாறும்**

**தென் கயிலாய கிரிப்பிரதட்சின விழாவில்**

**கரிகால சோழ பூபதிக்கு துக்கம் காட்டுதலும்**

இத்திரு விரிஞ்சையம் பதிக்கு தென்கிழக்கே காத தூரம் வட ஆற்காடு மாவட்ட கிரிபபிரக்யாதியில் 'தென் கைலாயகிரி' அமைந்துள்ளது. ஆதியில் கந்தர்வனொருவன் ஸ்ரீ தேவியார் கைலாயகிரியில் நீராடிக் கொண்டிருக்கையில் ககனமாக வந்தவன் யதேச்சையாக அவனது நிழல் அம்மையாரின் பேரில் விழ அம்மையார் உடனே கர்த்தப வடிவம் கொள்ளும்படியாக சாபமிட்டார். அக் கந்தர்வன் கர்த்தப முகத்துடன் அம்மையாரின் சாபம் நீங்க மகாமேரு சிகரத்தில் ஒரு கிரியை கொணர்ந்து பாலாற்றுக்குத் தெற்கே அமைத்து நாள் தோறும் கௌரி, பிரம்ம, திருமால் ஆகியோரும் இதர மாமுனிவர்களும் நீராடின பாலாற்றில் மூழ்கி ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரரை பூஜித்து அம்மலையை வலம்வர பழையபடி கந்தர்வ ஸ்வரூபம் அடைந்த மாண்பால் ஸ்ரீ வழித்துணையம்பதிக்கு அந்த தென் கைலயங்கிரிப் பிரதட்சணம் முக்கியத்துவம் பெற்றிருக்கிறது.

மற்றொரு முக்கிய சம்பவம் இத்தென் கைலாயகிரிக்கு கரிகால் சோழ பூபதி தன் ஆட்சியின் கடைசி காலத்தில் வற்கடம் (கடும் பஞ்சம்) தோன்றி மக்கள் மடிவதைக் காணச் சகியாது வந்து தன் இன்னுயிரை விட மலை உச்சியில் விழ எத்தனிக்கையில் இருமுறை கருமேகங்கள் வந்து வந்து போவதைக் கண்டு திகைத்து மூன்றாம் முறை மலை உச்சியிலிருந்து வண்ணான் குளக்கரை சமீபம் விழ எம்பெருமானார் காட்சி கொடுத்ததாக சொல்லப்படுகிறது.

மேற் கூறிய விசேடங்களால் ஆண்டுதோறும் ஸ்ரீ மார்க்கேசர் தைத் திங்கள் புனர்வசு நாள் அக்கினி பிரதட்சணம் அடவிபடர்ந்த மலைக் கணவாயில் பல்லாக்கில் சென்று "வண்ணாங்குளம்" என்ற தடாகக்

கரையினிடை அமருமுன் சிவ பக்தன் கரிகால பூபதிக்கு துக்கம் காட்ட மௌனமாக சென்று தடாகைக் கரைக்கு வந்ததும் பரமனுக்கும் கிரிக்கும் கற்பூர ஆரத்தி காட்டப்பட பக்தர்களை அனுக்கிரக்கிறார்.

சிவபக்தனான கரிகால சோழ பூபதிக்கு ஸ்ரீ மார்க்கபந்தீஸ்வரர் கிரிப்பிரதட்சண விழா சமயம் துக்கம் காட்டுவது மாசி மாதம் ஸ்ரீ அருணாசலேஸ்வரர் திருவண்ணாமலை பள்ளிகொண்டாபட்டில் வள்ளால மகாராஜா காலமானதற்கு திருக் கருமம் செய்து வருவதைப போன்றுள்ளது. தென் கைலாயகிரி முகப்பில் ரிஷபம் இருந்து வருவதும் ஆங்குள்ள மலையாள பக்தர்கள் ரிஷபக் கொடி பறக்கவிட்டு அதிர்வேட்டு போட்டு தென் கைலாயகிரிப்பிரதட்சிண விழாவில் ஸ்ரீ மார்க்கபந்துவை வணங்கி திருவிழா கொண்டாடுவது யாவரும் காணவேண்டிய காட்சியாகும்.

## சிற்பச் சிறப்புக்கள்

தென்னாட்டுத் திருக்கோயில்கள் இறைவழிபாட்டுக்குரிய இடங்களாக இருப்பதோடல்லாமல் சிற்பக் கலைக்கும் சிறந்த எடுத்துக்காட்டுகளாய் உள்ள ஸ்தலப் பெருமைகள் பலப்பல. இம்மண்டலத்தில் வாழ்ந்த மக்கள் அநேக காலமாய் பல ஒற்றுமையுடன் சிறப்புற்று இருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. சிவனும், விஷ்ணுவும் ஒன்று என்ற அடிப்படையில் அவர்கள் பல்வேறு அம்சங்களை அக்கால மக்களுக்கும், பிற்கால ஆஸ்திக அன்பர்களுக்கும் விட்டும் போயினர் என்பதை ஸ்தல வரலாறுகள் மூலம் அறிகிறோம். அவர்கள் அமைத்த கற்சிலைகளையும், கம்பீர கோபுரங்களையும், நாம் இன்று பார்த்து மகிழ்ந்து வணங்கிப் போற்றுகிறோம். பல்லவர்களும் விஜயநகர சாம்ராஜ்ய கிருஷ்ணதேவராயரும் அவருடைய பரம்பரையினரும், இம்மாபெரும் அழியாச் செல்வங்களை உருவாக்கினர் என்று தெரிகிறது. கோபுர வரிசைகளில் திரு விரிஞ்சிபுரம் கோபுரமும் அழகானவைகளில் ஒன்றாகும். மகாபலிபுர சிற்பங்களும், சுவாமி பூஜை இல்லாத வேலூர் கோட்டை கோயிலும், கடல் போல் விரிந்துள்ள காஞ்சிமாநகர கோயில்களின் சிற்பங்களும், மதில் அழகைப் பெற்ற திரு விரிஞ்சிபுரம் கோயில் இச் சிற்ப விரிசைகளில் சிறந்தனவாம்.

கார்த்திகைக் கடை ஞாயிறு ஐதீக சான்றான பாலகமூர்த்திக்குத் திருமுடி வளைத்த வரலாறு ஆலயத்துள் நுழைந்தவுடன் முதல் பிரகாரத்தில் தென்மேற்கு கலியாண மண்டபத்தின் அடிதளத்தில் சிற்பங்கள் மூலம் சித்தரிக்கப்பட்டுள்ளன. வடமேற்கு கலியாண மண்டபத்தில் எங்கும் காண முடியாத புதிய நிலையில் ஸ்ரீ பஞ்சமுக விநாயகர் சிம்மவாகனத்தில் காட்சி கொடுக்கும் சிற்பம் மிகவும் அழகாக இருக்கிறது. பிடாரன் சர்பத்தின் முன்னால் மகுடி ஊதும் சிற்பத்தை அந்த மண்டபத்தின் மேல் கிழக்கு பாகத்தில் காணலாம். கலியாண மண்டபங்களில் ராம கதை வரலாறும் திருமாலின்

அவதாரங்களும் பல இடங்களில் காணப்படுகின்றன. வடபுறம் பண்டைய முன்னோர் நாழிகாண கையாண்டகாலம் காட்டும் கல்லினையும், வடகிழக்கு மூலையில் நூற்றுக்கால் மண்டபத்தில் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஆனந்தத் திருத்தாண்டவம் கல்லினால் ஆக்கப்பட்ட மூலவிக்கிரகத்தையும், தென்புறம் சக்தியின் பல அவதாரங்களைச் சிற்பங்களாகத் தன்னிடத்தே கொண்ட சக்தி மண்டபம் ஒரு சிங்கத்தின் வாய் வழியாக நுழைந்து செல்லும் முறையில் அமைந்துள்ள சிம்ம தீர்த்தம் என்ற நடப்பாவிக் கிணற்றினையும் வடதென்புற கலியாண மண்டபங்களுக்கிடையில் ஒரே மஹாலிங்கத்தில் அற்புதமாக 1008 சிவலிங்கத்தையும் காணலாம். பத்தி மண்டப கம்பத்தில் ஸ்ரீகௌரி, விஷ்ணு, பிரம்மா, கரன் சிவசர்மன் ஆகியோர் ஈஸ்வரனைப் பூஜிக்கும் விதம் ஒரே சிற்பத்தில் செதுக்கப்பட்டிருக்கிறது. கோயிலில் உட்பிரகாரத்தில் பக்தர்கள் அடிநமஸ்காரம் செய்விக்க தலத்தில் திருஉரு தொடர்ந்து செதுக்கப்பட்டிருக்கிறது. பஞ்சமுக சதாசிவ லிங்கமும் 108 லிங்கமும் காணலாம். தனபாலன் எனும் வணிகனுக்குப் பெருமாள் வழித் துணை வந்த வரலாறு கோயில் சுற்று மதில்களில் சிற்பங்களாகப் பொறிக்கப்பட்டுள்ளன. இவையன்றிக் கோயில் சுவர்களில் பழங்கால செய்திகளை அறிவிக்கும் பல கல்வெட்டுகள் உள்ளன.

கோயில் சம்புவராயர் வாயிற படியைத் தாண்டியதும் இடது புறம் வேணுகோபால சுவாமி தென்படுகிறார். இக்கோயிலில கோகுலாஷ்டமி கிருஷ்ண ஜயந்தியும் விமரிசையாக கொண்டாடப்பட்டு வருகிறது.

முக்கிய சிற்பங்களைப் பற்றிய விளக்கங்களை எவருடைய உதவியுமின்றி புதிதாக வரும் பக்தகோடிகள் தாங்களாகவே சிற்பங்களைப் பார்த்தவுடன் தெரிந்து கொள்ளும் வண்ணம் ஆங்காங்கே விளக்கப்போர்டுகள் மூலம் ஆலய நிர்வாகிகளால் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு இருக்கின்றன. தவிரவும் மக்கள் குறைந்த கட்டணம் செலுத்துவதன் மூலம் ஆண்டவனின் சன்னதியில் திருமணங்களைச் சிறப்புற நடத்திக் கொள்ள நூற்றுக்கால் மண்டபத்தில் நிர்வாகிகள் தக்க வசதிகள் செய்துள்ளனர்.

### கல்வெட்டுகளும் அதன் மூலம் அறியப்படும் அரிய செய்திகளும்

இக் கோயிலில் சிறந்த தமிழ் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அவை மூலம் இக் கோயிலில் உள்ள பல மண்டபங்கள், மதில்கள், கட்டிடங்கள் முதலிய திருப்பணிகள் அவ்வக் காலங்களில் ஆண்டு வந்த மன்னர்களால் நடைபெற்று வந்ததாகத் தெரிய வருகிறது. தஞ்சாவூர் பெரிய கோவிலைக் கட்டின ராஜராஜசோழன் காலத்தில் அவனது பிரதிநிதி ஒருவன் இங்கே அரசாண்டதாகக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. கல்வெட்டுகளில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்துத் திருவிரிஞ்சிபுரம் என்று கூறப்படுகிறது. நந்தி விக்கிரம

பல்லவன், இராஜேந்திர சோழன், பராந்தக சோழன் 1, கோபுர கேசரிவர்மன், விஜயநகர மன்னர்களான நாராயண சம்புவராயர், அச்சுதராயர், தேவராயர், கிருஷ்ணதேவராயர், இம்முடி நரசிம்மராயர், கர்நாடக வெங்கடபதிதேவன் முதலிய மன்னர்களால் பற்பல திருப்பணிகள் நடந்திருக்கின்றன. இப்பவும் கோயில் துவஜஸ்தம்ப மண்டபத்தைத் தாண்டி உள்ளே போக இருக்கும் முதற்வாயிற்படி என்று சொல்லப்படுகிறது. மேற்கு கோபுர வாயிலில் உள்ள சூரியன், பிறைச் சந்திரன் வாள். வராக சின்னங்கள் மன்னர்கள் ஆட்சியைத் தெரிவிக்கின்றன.

சகம் 1418-ல் விஜயநகர மன்னன் இம்முடி நரசிம்மராயர் காலத்தில் எர்ரம நாயக்கரால் ஓர் மண்டபம் கட்டப்பட்டு துவஜஸ்தப மண்டபத்தில் உள்ள ஸ்ரீ எர்ரம விநாயகர் என்று வணங்கப்படுகிறது. சகம் 1471-ல் வேலூர் மச்ச நாயக்கர் குமாரர் பொம்மு நாயக்கரால் கோயிலைச் சுற்றிலும் தளவரிசை போடப்பட்டதாகத் தெரிகிறது. பெருமானுக்கு வழித்துணைநாதர் என்ற பெயர் காணப்படுகிறது.

கோயிலில் இறைவனுக்குத் தானம் வழங்கியது. நிலம் கொடுத்தது, கிராமங்கள் அளித்தது, நந்தவனத்துக்கும் விளக்கெரிப்பதற்கும் நிலம் விட்டது முதலிய செய்திகளைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. ஒரு கல்வெட்டில் எல்லா வகுப்பு அந்தணர்களும் கோயில் சன்னதியில் கூடி மணம் செய்வதற்கு வரதட்சிணை கொடுப்பதோ, வாங்குவதோ கூடாதென முடிவு செய்து அதை அரசனும் ஆமோதித்து, தவறினவர்களுக்கு தண்டனையும் ஏற்படுத்தியதாகச் சொல்லப்படுகிறது. எனவே நமது அரசாங்கம் வரதட்சிணையைத் தடுக்க சட்டம் கொண்டுவருவது தற்போது புதியதாக இருப்பினும், இப்படி ஒரு சட்டம் அந்தக் காலத்திலேயே ஏற்பட்டிருக்கிறது என்பதை அறிய பலருக்கும் வியப்பாகத்தான் இருக்கும் என்பதில் ஐயமில்லை. மற்றொரு கல்வெட்டில் குரு நமசிவாயமூர்த்தியின் மாணவர் ஆனந்த நமசிவாய பண்டாரத்துக்கு மடத்திற்காக ஒரு வீடு கொடுக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. குரு நமசிவாயர் என்பவர் திருவண்ணாமலை குகை நமசிவாயரின் சீடராவார்.

இத்தலத்தைப் பற்றிய 18 கல்வெட்டுகள் தென்னிந்தியக் கல்வெட்டுப் பகுதிகளில் 597 முதல் 614 எண் வரையில் 1787ம் ஆண்டில் 44Σ61 எண்களில் சர்க்காரால் நகல் எடுக்கப்பட்டுள்ளன. இதன் விவரம் வருமாறு:-

1. 597 (44 - 1887) கோபுரத்தின் உள்ளே இடது பக்கத்தில் சகம் 1418ல் விஜய நகர மன்னன் – இம்முடி நரசிம்மராயர் காலத்தில் எர்ரம நாயக்கரால் ஓர் மண்டபம் கட்டப்பெற்றது.

2. 598 (45) மேற்படி இடத்தில் சகம் 1395-ல் விஜயநகர மன்னன் தரணி வரதநரசிம்மராயர் காலத்தில் வழித்துணை நாயனாருக்கு நன்கொடை வழங்கியது.

3. 590 (46) மேற்படி இடத்தில் சகலயோக சக்ரவர்த்தி ராஜநாராயண மன்னன் காலத்தில் ஒரு தானக்குறிப்பு.

4. 600 (47) சகம் 1463-ல் விஜயநகர மன்னன் அச்சுத தேவராயர் காலத்தில் ஓர்.தானக்குறிப்பு.

5. 601 (48) கோபுரத்தின் உள்பக்கத்தில் வலது புறத்தில் சகம் 1054-ல் விஜயநகர மன்னன் சாளுவ நரசிம்மதேவராயன் காலத்தில் ஓர் சாசனக் குறிப்பு.

6. 602 (49) சகம் 1347-ல் விஜயநகர மன்னன் காலத்தில் பிராமணருள் பல வகுப்பினரும் சேர்ந்து திருமணத்தில் கன்னிகாதானம் செய்யும் போது பண பேரம் செய்யக்கூடாதென்றும், அப்படிச் செய்தால் அரசனால் தண்டிக்கப்படவும், ஜாதியிலிருந்து விலக்கப்படவும் நேருமென்றும் ஒப்பந்தம் செய்து கொண்டது.

7. 603 (50) சகம் 1457-ல் விஜயகநகர மன்னன் அச்சுததேவராயர் காலத்தில் பிராமணர்களுக்கு நிலங்கள் தானம் செய்தது.

8. 604 (51)முன் கோபுரத்தின் பின்பக்கத்தில் வலது புறத்தில் சகம் 1435ல் விஜயநகர மன்னன் கிருஷ்ணதேவராயர் காலத்தில் ஓா சாசனக்குறிப்பு.

9. 605 (52) மேறபடி இடத்தில் மற்றோர் சாசனம்.

10. 606 (53) கோபுரத்தின் உள்பக்கத்தில விஜயநகர மன்னன் அச்சுத தேவராயர் காலத்தில் சகம் 1453-ல் கௌதமான் வயாகருணீக வீரப்பய்யன் என்பவனால் சில கிராமங்கள் கோயிலுக்கு தானம் செய்யப்பட்டது.

11. 607 (54) மேற்படி இடத்தில் பல்லவ மன்னன் கோவிஜயநந்தி விக்ரவர்மனது 9-வது ஆண்டில் கோயிலுக்கு முன்னிடத்தில் திருப்பணி செய்யப்பட்டது.

12. 608 (55) மேற்படி இடத்தில் மேற்படி மன்னனது 47-வது ஆண்டில் ஓர் குறிப்பு.

13. 609 (56) மேற்படி இடத்தில் கோபாகேசரிவர்மன் உடையார் ராஜேந்திரசோழன் காலத்தில் அதிராஜேந்திர வளநாடு ஜெயங்கொண்ட சோழ மண்டலத்தில் சேர்ந்த மியரி நாடு கங்கை மார்த்தாண்டபுரம் கிராமத்தார் சோமேஸ்வரப் பெருமானுக்கு நிலம் அளித்தது.

14. 610 (57) மேற்படி இடத்தில் மதுரை கோபாகேசரிவர்மன் காலத்தில் ஓர் சாசனம்.

15. 611 (58) அழகிய சம்புவராய மன்னன் காலத்தில் ஓர் குறிப்பு.

16. 612 (59) சகலலோக சக்கரவர்த்தி ராஜநாராயண சம்புவராய மன்னன் காலத்தில் ஓர் சாசனக்குறிப்பு.

17. 613 (60) உட்கோயிலில் சகம் 1471-ல் வேலூர் மச்சநாயக்கரின் குமாரர் பொம்மு நாயக்கர் என்பவரால் தம் தந்தையின் நினைவாக கோவிலைச் சுற்றிலும் தளவரிசை போடப்பட்டது- (இக் கல்வெட்டின் விபரம் தனியே ஆங்கிலமொழி பெயர்ப்புடன் கட்டப்பட்டு உள்ளது).

18. 614 (61) தென்புற வாயிலில் ஓர் கல்லில் உள்ளது. சகம் 1514-ல் கர்னாடக மன்னன் முதலாம் வெங்கடாசலபதி மன்னன் காலத்தில் புன்னாற்றூர் பெரிய எர்ரம நாயக்கன் என்பவன் ஆனந்த நமசிவாய பண்டாரத்துக்கு ஓர் வீடு தானம் செய்தது.

(613) (60-1887) இதன் கல்வெட்டுச் செய்திகள் :-

"ஸ்வஸ்தி ஸ்ரீ -1471-ன் மேல் செல்லாநின்ற சௌமிய வருஷ மேஷநாயிற்று பூர்வபட்ட ஸ்வமியும் பெற்ற குருவார புனர்வசு நாள் வேலூர் மச்ச நாயக்கருக்குத் தன்மமாக குமாரர் பொம்மு நாயக்கர் அடையவளைஞ்சான் தன வரிசை படுப்பிந்தார்".

## TRANSLATION

"Let there be prosperity. On Thursday the day of (the Natshathra) bunervasu which corresponds to the 7th lunar day of the former half of the month of mesha of the sowmya year which was current after the selivakana saka year 1471, in order to procure religious merit to Macha Nayaka of Velur -Prince Pommu Nayaka, aid the pavement round the whole temple."



வெளிப்பிரகாரத்தில் உள்ள கலை நயமிக்க மண்டபத்தின் தோற்றம்

## ஸ்ரீ அப்பைய தீக்ஷிதர் அருளிய

# ஸ்ரீ மார்க்க ஸஹாய லிங்க ஸ்துதி

பயோநதீ தீர நிவாஸலிங்கம்
  பாலார்க்ககோடிப் ப்ரதிமம் த்ரிநேத்ரம்
பத்மாஸநோர்ச்சித் திவ்ய லிங்கம்
  வந்தாமஹே மார்க்க ஸஹாய லிங்கம்

கங்காதரங்கோல்ல ஸதுத்த மாங்கம்
  கஜேந்ர சர்மாம் பர பூஷிதாங்கம்
கௌரீமுகாம்போஜ விலோலே ப்ருங்கம்
  வந்தாமஹே மார்க்கி ஸஹாய லிங்கம்

ஸு கங்கணீ பூத மஹாபுஜங்கம்
  ஸம்ஜ்ஞான ஸம்பூர்ண நிஜாந்தரங்கம்
ஸுர்யேந்து பிம்பா நலபூஷிதாங்கம்
  வந்தாமஹே மார்க்க ஸஹாய லிங்கம்

பக்தப்ரியம் பாவவிலோல ப்ருங்கம்
  பக்தானுகூலா – மல பூஷிதாங்கம்
பாவைக லோக்யாந் தரமாதி லிங்கம்
  வந்தாமஹே மார்க்க ஸஹாய லிங்கம்

ஸாமப்ரியம் ஸௌம்ய மஹேசலிங்கம்
  ஸாமப்ரதம் ஸௌம்ய கடாக்ஷலிங்கம்
வாமாங்க ஸௌந்தர்ய விலோலி தாங்கம்
  வந்தாமஹே மார்க்க ஸஹாய லிங்கம்

பஞ்சாக்ஷரீ பூத ஸஹஸ்ரலிங்கம்
  பஞ்சாம்ருத ஸ்நான ப்ராயணாங்கம்
பஞ்சாம்ருதாம் போஜ விலோலப்ருங்கம்
  வந்தாமஹே மார்க்க ஸஹாய லிங்கம்

வந்தே ஸுராராதித பாத பத்மம்
  ஸ்ரீ ச்யாம வலலீ ரமணம் மஹேசம்
வந்தே மஹாமேருஷ்ராஸநம சிவம்
  வந்தேஸதா மார்க்க ஸஹாதேவம்

அப்பைய தீட்சதர் பாடிய ஸ்ரீ மார்க்கப்பந்து ஸ்தோத்ரம் தமக்கு வழியில் நேர்ந்த இடையூறுகளைப் போக்குவதற்காக இயற்றியது.

சம்போ மஹாதேவ தேவ

சிவ சம்போ மஹாதேவ

தேவேச சம்போ

சம்போ மஹாதேவ தேவ!!

1. பாலாவநம்ரத்கிரீடம், பாலநேத்ரார்ச்சிஷா தக்த பஞ்சேஷு

கூடம்

சூலஹதாராதி கூடம், சுத்தமர்த்தேந்து சூடம்

பஜேமார்கபந்தும்!! சம்போ!!

(கருத்து) சிறந்த கிரீடத்தைத் தரித்தவரும், நெற்றிக் கண்ணால் மன்மதனை எரித்தவரும், சூலாயுதத்தால் பகைவர்களைக் கொன்றவரும், சந்திரனைத் தலையில் சூடியவரும மார்க்கபந்துவாகத் தோன்றிக் காப்பவருமாகிய உம்மை வணங்குகிறேன்.

2. அங்கே விராஜத்புஜங்கம், அங்ரகங்கா தரங்காபி

ராமோத்மாங்கம்

ஓங்காடி வாடி குரங்கம், வித்ஸம்ஸேவி தாங்க்ரிம்

பஜேமார்க பந்தும்!! சம்போ!!

(கருத்து) பாம்பை ஆபரணமாக உடையவரும், கங்கை நதியைச் சடையில் தரித்தவரும், சிங்கார வனத்துக்கு மான் போன்ற வரும், சித்தர்களால் வணங்கப்பட்ட திருவடிகளையுடையவரும், மார்க்க பந்துவும் ஆகிய உம்மை இறைஞ்சுகிறேன்.

3. நித்யம் சிதானந்தரூபம், நின்ஹுதா சேஷலோ

கேச வைரிப்ரதாபம்

கார்த்த ஸ்வரா கேந்த்ர சாபம், க்ருக்தி வாஸம் பஜே

திவ்ய ஸன்மார்க்கபந்தும்!! சம்போ!!

(கருத்து) நித்யமானவரும், சிதானந்த ரூபத்தையுடையவரும், எல்லா உலகத்தார்க்கும் பகைவர்களான அசுரர்களின் வலிமையை அழித்தவரும், பொன்மலையை வில்லாக வளைத்தவரும், யானைத்தோலைப் போர்வையாக உடையவரும் மார்க்கபந்துவும் ஆகிய உம்மைப் போற்றுகிறேன்.

கந்தர்ப்ப தர்ப்பக்ன மீசம் கால்கண்டாம் மஹேசம் மஹாவ்யோம

கேசம்

குந்தாபதந்தம் ஸுரேசம், கோடி சூர்யப்ரகாசம்

பஜேமார்கபந்தும்!! சம்போ!!

(கருத்து) மன்மதனுடைய ஆற்றலை அடக்கினவரும், விஷத்தைக் கண்டத்தில் வைத்தாரும், பரந்த ஆகாசத்தைக் கேசமாகக் கொண்டவரும், கோடி சூரியனுக்குச் சமமான பிரகாசம் பொருந்தியவரும், மார்க்கபந்துவுமாகிய உம்மை வணங்குகிறேன்.

மந்தார பூதேருதாரம், மந்தார கேந்த்ர மஹா

கௌர்ய தூரம்

ஸிந்துர தூரப்ரசாரம் ஸிந்து ராஜாதி தீரம் பஜேமார்க

பந்தும்!! சம்போ!!

(கருத்து, மந்தார மென்னும் கற்பகவிருக்ஷத்தைப் பார்க்கிலும் மிகுதியான பொருள்களைக் கொடுப்பவரும், மந்திரமலையைக் காட்டிலும் மிகுந்த வலிமை உள்ளவரும், கௌரிக்குப் பக்கத்திலிருக்கின்றவரும், ரிஷபத்தில் ஏறி வெகுதூரம் சஞ்சரிக்கின்றவரும், சமுத்திர ராஜனைப் பார்க்கிலும், மிகுந்த தீரராக உள்ளவரும், மார்க்கத்தில் பந்துவாகத் தோன்றிக் காப்பவருமாகிய உம்மை வணங்குகிறேன்.

6 அப்பய்ய யஜ்வேந்த்ர கீதம், ஸ்தோத்திர ராஜம்

படேத்யஸ்து பக்த்யா ப்ரயானே

தஸ்யார்த்த ஸித்திம் விதத்தே, மார்மத்யேஸ

பயம்சாது தோஷோ மஹேச!! சம்போ!!

(கருத்து) அப்பய என்றி உம்முடையதாசன் "பஞ்சரத்ன மாலா" என்ற காவிய ரத்தினமாலையை உமக்கு சமர்ப்பித்துக் கொண்டிருக்கிறேன். இந்த காவிய சுலோகங்களை அனுதினமும் மவுனம் செய்து பூஜித்து வருவோர் இகபர தருமார்த்தக் காம்யங்களை அடைய அனுக்கிரகிப்பாயாக.

வாழ்க வாழ்க இறைவன் திருவடி,

வாழ்க வாழ்க இறையருள் பெற்றவர்

வாழ்க வாழ்க ஈரேழுபுவனமும்

வருகவே வருக நின் அடிமலர் மறவாத சிந்தையென்றுக

வாழ்க வாழ்கவே

உ

சிவமயம்

# ஸ்தல பாடல்கள்

மலையேற்று நிறை புரந்தோ னயின் பரவும் வழி
த்துணைவர் மகிழுஞ் சேயைக்
கலையேற்று மடமயிலு மலர்க்குயிலுந் தொழு
முமையாள் களிக்கும் வாழ்வை
விலையேற்றம் படைத்தமணி வெயில் விரிக்கு
மெயில்புடை சூழ் விரிஞ்சை மேவு
மலையேற்ற மதக்களிற்று முகத்தவனை யடி
வணங்கி யன் புகூர்வாம்.

– விநாயகர் துதி
திருவிரிஞ்சைப் புராணம்

அந்திய போ தழகுறவே – நடித்தருளம் வழித்
துணைவ ரருளுங் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறியயிலே
டுத்து வருஞ் செவ்வேளைச்
சந்திப்போ மலர்சொரிவோம். புகழ்ந்திடுவோ
மவன் கமலத்தாளுந் தோளுஞ்
சிந்திப்போ மாதலினா னமது பழவினைக ளெல்லாஞ்
சிந்திப்போமே.

– சுப்பிரமணியர் துதி
திருவிரிஞ்சைப் புராணம்

1. முளைத்தவரை முனையிடத்தின் முழுத்தவரை
மகிழ்ந்தவரை முருகன் வேலாற்
றுளைத்தவரை யெனவெனது பழவினையை யலைத்
தவரைச் சுடர்க் குன்றாகக்
கிளைத்தவரை வளைத்தவரை யொருசிறுவன்
கிளையோடு கிளரச் சென்னி
வளைத்தவரை வணிகனுக்கு வழித் துணையாய்
நடந்தவரை வழுத்துவோமே

– மார்க்கசகாயர் துதி
(சைவ எல்லப்ப நாவலர் – திரு விரிஞ்சைப் புராணம்)

2. கான்சாயும் வெள்ளி மலைக்கரசே நின்கழல் நம்பினேன்
ஊன்சாயும் சென்ம மொழித்திடுவாய் காவூரணுக்காய்
மான்சாய நல்ல மழுவலம்சாய தேன் அனைய
கொன்றைத் திருமேனிசாய்ந்த சிவக்கொழுந்தே

3. வழித்துணையாய் மருந்தாயிருந்தார் முன்
கழித்துணையாய் கற்றிலாதவர் சிந்தை
ஒழித்துணையாய் உம்பராற் உலகேழும்
வழித்துணையாய் பெருந்தன்மை வல்லானே.

– திருமூலர் திருமந்திரம்

4 தெண்ணீர் புனர்கெடில வீரட்டமுஞ் சீக்காலி வெல்லந்·
திருவேட்டியு
முன்னீரோரேட கமமூரலம் பருறையூர் நரையூராண நல்லூர்
விண்ணார் விடையார் விளமன்வெண்ணீ மீயச்சூர் வீழி
மிழலைமிக்கர்
கண்ணார் நுதலார் கரபுரமும் கபாலியாரவர் தங்காப்புக்களே

– அப்பர் ஸ்வாமிகள் தேவாரம் திருத்தாண்டகம்

5. சாய்ந்திட்ட வர்க்குத் திருமேனிமுன் கையைச் சந்தனமரத்
தேய்ந்திட்டவர்க்கெவர் நேரென்பரால் அங்கம் செந்தழலில்
தோய்ந்திட்டவர்க்குச் சருவாங்கமும் திருதூள்படவே
மாய்ந்திட்டவர்க்கினிதோ எளிதோ தொண்டை மண்டலமே

– தொண்டை மண்டல சதகம்

6. பழுதறவே எழுகடலும் எழுகிரியும் எழுதலமும் படைத்த
வேதக்
கிழவறியா முடியை ஒருபாலனறிந்த பதிகிளக்கக் கேளும்
அழகுதரு நடம்புரியும் இறைவருக்குப் பிகை பூசை அயனார்
பூசை
விழைவுதரும் அரிபூசை அரன்பூசை புரிந்த திருவிரிஞ்சை
முதூர்

– அருணாசலப் புரணம்

இரட்டைப் புலவர்கள் இத்தலத்து இறைவன் மீது சில பாடல்களைப் பாடியிருக்கின்றனர். அவர்கள் நகைச்சுவைப் பாடல்களை நயம்பட உரைப்பதில் வல்லவர்கள். அப்பாக்களில் சில பின்வருமாறு:-

தேன்பாயும் சோலைத் திருவிரிஞ்சை மார்க்கேசா
நான் பாவி வந்துன்னை நாடினால் – ஏன்பாவி
என்று பேசாமலிருந்தாய் தலை வளைத்து
இன்று துணை யாரு மிலையே

இலையே துணையெனக் கீசா மார்க்கோ
தலையே வளைக்கத்தகுமோ – அலையுமென்மேல்
ஏனோ தானோவென்றிருப்ப தழகோ, நீர்
தானோ வழித்துணை நாதன்

அப்பார் வயல் சூழணி விரிஞ்சை வாழரனார்
இப்பாரில் வணிகனுயிரிய சித்தா தரம்மானை
இப்பாடல் வணிகனுயிரட்சித் – தாராமாயின்
தப்பா தெவர்க்கும் சகாயரோ வம்மானை

சதாகால மார்க்கசகாயர் காணம்மானை
காளையும்காமனையுங் காட்சி சிறுத்தொண்டனிட
பாலனையுங் கொன்ற பழிக்காரனம்மானை
சாலவுயர்தோர் முடியைச் சாய்க்காதரா வம்மானை

சாய்த்தவரெல்லாம் பெரிய சைவர் காணம்மானை
சுரபுரத்திரை யரிய்யன் றொழும்பாஞ் சுடரைச்
சிரபுரதிறை யருந்து பாலுதவிய தேனை
யரபுரத்துறை யமர்திடு மயிலை யாரமுதைக்
கரபுரத்துறையிறைவியைக் கருதுவோம் கருத்தால்

– மரகதவல்லி துதி
(சைவ எல்லப்ப நாவலர் திருவிரிஞ்சைப் புராணம்)

# திருவிரிஞ்சை முருகன் திருப்புகழ்

மருவு மஞ்சுபுத முரிமை வந்திடாது
    மலமிதென்றுபோட — அறியாது
மயல்கொளிந்தவாழ்வு அமையுமெந்தநாளும்
    வகையில்வந்திராத — அடியேனும்
உருகியன்பினோடு உனை நினைந்துநாளும்
    உலகமென்று பேச — அறியாத
உருவமொன்றிலாத பருவம்வந்துசேர
    உபயதுங்கபாத — மருள்வாயே

5. இறைவனின் திருவடிகளிலே ஐம்புலன்களின் இன்பத்தையும் அனுபவித்து, சிவபெருமானை 'யமன் வருமுன் உன் திருவடியை என சென்னியில் சூட்டியருள வேண்டும். கூற்றம் குளமப்பான முள் பூவாரடிச் சுவடு என் மேல் பொறித்து வை" என்று வேண்ட, நல்லூரா என்னும் சிவதலத்தில் அப்பர் பெருமானுக்கு 'சென்னிமிசைப் பாத மலர் சூட்டினார் சிவபெருமான்' என்பர் சேக்கிழார்.

6. ஞான சம்பந்தரும் இந்த முறையில் சிவப்பெருமானை நல்லூரில் இறைவனது திருவடி வேண்டும் என்று 'நாதனே! நல்லூர் மேவும் பெருமானை நம்பனே! உன்பாதமெய் நிழல் சேரும் பருவம் ஈது" எனக் கூறி சோதியுள் சென்றதாக கூறுவர் சேக்கிழார்.

7. இத்தகைய பெருமையுடைய இறைவனின் திருவடிகளை வணங்கி வாழ்வோமாக.



# ஆலய வழிபடும் முறை

1. கோயிலில் வழிபடுவோர். நீராடி, தூய ஆடை அணிந்து, சமய சின்னங்கள் தரித்து, அன்புடனும், ஆசாரமுடனும், கோயிலுக்கு, செல்லுதல் வேண்டும்.

2. கொடி மரத்திற்கு வெளியே விழுந்து வணங்குதல் வேண்டும். மற்ற உள் பிரகாரங்களில் விழுந்து வணங்குதல் குற்றமாகும்.

3. விநாயகரை ஒரு முறையும், சிவமூர்த்தியை மூன்று முறையும், அம்பிகையை நான்கு முறையும், வலம் வருதல் வேண்டும்.

4. கோயிலில் ஒருமைப்பட்ட மனத்துடன் வழிபாடு செய்ய வேண்டும்.

5. கோயிலில் வழிபடுவோர், வீண்வார்த்தைகள் பேசுவதும், எச்சில் துப்புவதும், பிற தீமைகள் செய்தலும் கூடாது.

6. அர்ச்சகர் தரும் விபூதி பிரசாதங்களை பய பக்தியுடன் இரு கரங்களாலும் ஏந்தி பெறுதல் வேண்டும்.

7. பிரசாதங்களை, சிந்துதலும், ஒரு புறத்தில் எறிவதும் பாவமாகும்.

8. மூலவர் சிவலிங்கத்திற்கும், நந்தி தேவருக்கும், இடையே போவது குற்றமாகும்.

9. வழிபாடு முடிந்தவுடன், கொடி மரத்தின் அருகிலிருந்து வட திசை நோக்கி அமர்ந்து, மூலமந்திரம் ஜபிக்க வேண்டும்.

10. கோயிலில் நிசப்தமாக இருக்க வேண்டும்.

11. கோயிலில் சந்நிதியில் விளக்குகளில், எண்ணெய் இடுதல் வேண்டும்.

12. கோயில் சுத்தமாக இருக்க ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும்.

13. சந்நிதியை விட்டு விலகி இருபுறமும் வரிசையாய் நின்று தரிசிப்பது முறை.

14. மஹாதீபர்ராதனை நடக்கும்போது. அதை கடந்து உள்ளே செல்வது கூடாது.



சந்திரசேகரர், அம்மன்



வள்ளி முருகன, தெய்வானை



செந்தூர கணபதி சன்னதி

ஸ்தல புராணம் விற்று வரும் பணத்தில்

செந்தூர கணபதி சன்னதி கட்டப்பட இருக்கிறது.

உபயதாரர் :

**திருமதி & திரு நாகராஜன்**

## சிம்மகுளத்தின் அழகான முகப்பு



இத்திருக்குளத்தில் கார்த்திகை கடை ஞாயிறன்று குளித்து கோயிலில் படுத்துறங்கி சுவாமியை தரிசிப்போர்க்கு மக்கட்பேறும் மற்றும் பல நன்மைகளும் கிட்டும்.